4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண்: எம். 8798.

கதிர் 11) மதுரை 20-3-73 செவ்வாய் (மலர் 66

## பட்டதாரி ஆசிரியர்கள் விடுதலை

சென்னை, மார்ச். 18—

சென்னை நகரில், மறியலின்போது கைது செய்யப்பட்ட 19 ஆசிரியைகள் உட்பட 1709 பட்டதாரி ஆசிரியர்கள் அனைவரும் நேற்று மாலை விடுதலை செய்யப்பட்டனர்.

மதுரையிலும் கைது செய்யப்பட்ட பட்டதாரி ஆசிரியர்கள் அனைவரும் விடுதலை செய்யப்பட்டனர்.

## வீரதீரச்செயல் அரச குடும்பமே கைது

நாம்பென், மார்ச். 18—

கம்போடிய நாட்டிலுள்ள பொம்மை அரசின் தலைவரான லான்நால் அரசாங்கம் செயல்படும் அரண்மனையின் மீதே ஒரு விமானத்தில் தாழப் பறந்து குண்டு வீசப்பட்டது. குண்டு வீச்சை நடத்தியவர் இளவரசர் சிகானூக்கின் மருமகனும், முன்னாள் விமானப்படைத் தளபதியுமான சேப்டன் சோபாத்ரா ஆவார். இதில் ஏராளமான உயர் அதிகாரிகள் கொல்லப்பட்டனர்.

ஒரு மணி நேரம் குண்டு வீச்சை நடத்திவிட்டு கீழே குதித்து மற்றொரு அமெரிக்க விமானத்தில் ஏறி விடுதலைப் படைகள் வசமுள்ள பாதுகாப்பான பகுதிக்குள் மறைந்துவிட்டார் சோபாத்ரா. இதன் பிறகு கம்போடிய கலிப்படையினர் சிகானூக்கின் தாயாரையும் ஏனைய உறவினரையும் கைது செய்துள்ளனர்.

## வீரசுதந்திரம் வேண்டி நின்றோர்



குண்டு வீச்சிற்குப்பின் ஹனாய் மருத்துவமனை
—புகைப்படம் சோவியத் செய்தி நிறுவனம்

## ★ புதிய வரிச்சுமைகளை ★ விலைவாசி உயர்வை ★ மின் வெட்டை ★ அடக்குமுறைகளை எதிர்த்து

# தமிழகமெங்கும் இன்று மறியல்

மதுரை, மார்ச். 20—

**விண்முட்டும் விலைவாசி உயர்வு, வேதனைமிகு வேலையின்மை, தாங்க முடியா வரிச்சுமை, வாழ்வில் இருள் சூழ்ந்திடும் மின்வெட்டு — இத்தனைக்கும் மேலாக ஆட்சியாளர்களின் அடக்குமுறை பேய்த்தாண்டவம்—இவற்றை எதிர்த்து, இன்று (செவ்வாய்) மத்திய — மாநில அரசுகளது அலுவலகங்கள் முன்னர் மறியல் போர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழுவின் அறைகூவலுக் கேற்ப நடைபெறுகிறது.**

**மத்திய — மாநில அரசுகளின் கொள்கைகளை எதிர்த்து நடைபெறும் இந்த மாநிலம் தழுவிய மறியல் போராட்டத்தில் கட்சித் தோழர்களும் ஆதரவாளர்களும் தொழிற்சங்க, விவசாயிகள் சங்க ஊழியர்களும், மாதர்களுமாக—ஆயிரக்கணக்கில் கலந்துகொள்கிருர்கள்.**

### மதுரையில்

மதுரை மாநகரில் மூன்று இடங்களில் — மாவட்டக் கலெக்டர் அலுவலகம் முன்பும், மத்திய தொலைபேசி அலுவலகம் முன்பும், பஜார் போஸ்ட் ஆபீஸ் முன்பும் — மறியல் நடைபெறுகிறது.

### முதல் அணி

1 முதல் 7 வது வார்டுத் தோழர்களும், தல்லாகுளம் கிளைத்தோழர்களும், செல்லூர் ஐக்கிய கைநெசவுத் தொழிலாளர் சங்கத்திலிருந்து ஊர்வலமாகப்புறப்பட்டுச் சென்று கலெக்டர் அலுவலகம் முன்பாக மறியல் செய்வர். கே. வாசுதேவன் சே, அங்கமுத்து கே அய்யாவு ஆகியோர் தலைமை வகிப்பர்.

### 2வது அணி

8 முதல் 12-வது வார்டு 32 முதல் 45வது வார்டு மற்றும் சாத்தமங்கலம் ஜெய்கிந்த்புரம், சோலையழகுபுரம் ஆகியகிளைகளைச் சேர்ந்த தோழர்கள் கட்சி அலுவலகத்திலிருந்து ஊர்வலமாக புறப்பட்டுச் சென்று தெற்குச் சித்திரை வீதியிலுள்ள பஜார் போஸ்ட் ஆபீஸ் முன்பு மறியல் செய்வர். எஸ் மன்னூர்சாமி வி வாழவந்தான் ஆகியோர் தலைமையேற்பர்

### 3வது அணி

13 முதல் 25-வது வார்டு தோழர்களும், 31-வது வார்டு தோழர்களும் முனிச்சாலையிலுள்ள ஞ்சாலைத் தொழிலாளர் சங்க கிளையிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு, கீழமாசிவீதியில் உள்ள மத்திய தொலைபேசி அலுவலகம் முன்னால் மறியல் செய்வர். வி வீரபத்திரன், வி பாலகிருஷ்ணன், ஜே எஸ் கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் தலைமையேற்பர்.

### திண்டுக்கல்தாலுகா

திண்டுக்கல் நகர், திண்டுக்கல் தாலுகா, வேடசந்தூர் தாலுகாவில் உள்ள அரசு அலுவலகங்கள்முன் மறியல் நடைபெறுகிறது.

திண்டுக்கல் தாலுகா அலுவலகம்முன் தோழர்கள் என. வாதராஜன், வி. எஸ். எம். மரைக்காயர் தலைமையிலும்,

பேகம்பூர் அஞ்சலகம் முன் எஸ. ஏ. தங்கராசன் ஏ. சார்லஸ், பி. ஏ, தாஸ் தலைமையிலும்,

நாகல் நகரில் உள்ள மெங்கில்ஸ் ரோடு அஞ்சலகம் முன் எம். ஏ. சுக்கூர், என். கே. இராமச்சாரி பி, அம்மாவாசை தலைமையிலும்மறியல் நடைபெறும்.

வேடசந்தூர் அஞ்சலகம் முன்பு ஜி. குருசாமி தலைமையிலும், கோவிலூர் அஞ்சலகம் முன் பி. வரப்பன் தலைமையிலும், குஜிலியம்பாறை அஞ்சலகம் முன் எம். மாரிமுத்து தலைமையிலும், எரியோடு அஞ்சலகம் முன் எஸ். லெட்சுமணன் தலைமையிலும், அய்யலூர் அஞ்சலகம் முன் வி. குமரவேல், பழனியாண்டி தலைமையிலும், சின்னளபட்டி அஞ்சலகம் முன் எம் பி மணிவேல் தலைமையிலும், சித்தையங்கோட்டை அஞ்சலகம் முன் சி. த. சங்கராசு தலைமையில், அய்யம்பாளையம் ஸ்டேட் பாங்க் முன் நீ பகவான் தலைமையிலும் மறியல் நடைபெறுகிறது. இந்த மறியலில் பல நூற்றுக் கணக்கான தோழர்கள் ஈடுபடுகிருர்கள்.

### சென்னையில்

சென்னை நகரில் ஜெனரல் போஸ்ட் ஆபீஸ் முன்பும், மாவட்டக் கலெக்டர் அலுவலகம் முன்பும மறியல் நடைபெறுகிறது. தோழர்கள் வி. மீனாட்சிசுந்தரம், கே. கஜபதி ஆகியோர் தலைமையில் நடைபெறும். இந்த மறியல்களில் நூற்றுக்கு மேற்பட்டோர் ஈடுபடுகிருர்கள்.

மறியல் தொண்டர்கள் காலை 9 மணிக்கு பிராட்வே லோன்ஸ்குயர் பூங்காவிலிருந்து ஊர்வலமாகப் புறப்படுவார்.

### மன்னைத் தாலுகாவில் 7 இடங்களில் 318 பேர்

மன்னைத் தாலுகாவில் மொத்தம் 7 இடங்களில் நடைபெறும் மறியல் போராட்டத்தில் மொத்தம் 318 தோழர்கள் கலந்து கொள்ளுகிருர்கள்.

மன்னை ஆர் டி ஓ அலுவலகம் முன் நடைபெறும் மறியல் போராட்டத்துக்கு கே. சபீர்தாஸ் தலைமையில் 63 பேரும், மன்னை (பெரிய கடை) அஞ்சல் அலுவலகம் முன் ஜி. சீனிவாசன் தலைமையில் 36 பேரும், கோட்டூர் அஞ்சல் அலுவலகம் முன் பி. பொதியப்பன் தலைமையில் 37 பேரும், வடபாதிமங்கலம் அஞ்சல் நிலையம் முன் ஆர் வெங்கடாசலம் தலைமையில் 45 பேரும், கூத்தாநல்லூர் துணைபதிவாளர் அலுவலகம் முன் ஏ. கோவிந்தராசு தலைமையில்

(4ம் பக்கம் பார்க்க)

## அவர்தம் விழுப்புண் ஆற்றிட

செங்குருதி பாய்ச்சியும், ஜீவத் தியாகம் செய்தும் 12 ஆண்டுகளாக நடந்த வியட்னும் மக்களின் வீரசுதந்திரப்போராட்டம் நின்றுவிட்டது. வீரஞ்செறிந்த வட வியட்னும் மக்களுக்கு வெற்றியாக முடிந்துவிட்டது வியட்னும் பரம்பரை, போராடும் பரம்பரை! போராடிப் போராடி வெற்றிமேல் வெற்றி பெறும் வீரப் பரம்பரை! எத்தனையோ ஏகாதிபத்ய ஆக்ரமிப்பாளர்கள் வியட்னும் மண்ணிலே படையெடுத்தார்கள்.

### வீர காவியம்

ஆக்ரமிப்பாளர்கள் அனைவரும் படுதோல்வி கண்டார்கள். நடைபெற்ற போர்கள் ஒவ்வொன்றிலும் வியட்னும் மக்கள் வீரகாவியம் எழுதினுர்கள். வெற்றிக்கொடி நாட்டினுர்கள்.

அமெரிக்காவை கொலம்பஸ் கண்டுபிடிப்பதற்கு 50 ஆண்டுகளுக்கு முன்னமேயே—வியட்னும் மீது படையெடுத்த 5 லட்சம் அன்னிய நிலப்பிரபுத்துவ சீன அரசின் துருப்புகளின் முதுகெலும்பை முறித்தனர்; முறியடித்து விரட்டினர்.

முதலாவது உலக மகாயுத்தம் நடந்தபோது, படையெடுத்து வந்த ஜப்பானியர்களை முறியடித்து விரட்டினர்.

வியட்னும் சுதந்திரம் அடைவதற்கு முன்பே—அதாவது 1954ம் ஆண்டுக்கு முன்பே—பிரஞ்சு ஏகாதிபத்யவாதிகளுக்கு எதிராக 8 ஆண்டுகள் போர் புரிந்தார்கள்.

இப்பொழுது, கடந்த 12 ஆண்டுகளாக, அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்துப் போரிட்டு வெற்றிக் கொடி நாட்டி வான்புகழ் பெற்றுர்கள், இவ்வாறு வியட்னும் மக்கள், ஜெயம் பொருந்திய ஒரு வீர வரலாற்றையே எழுதிவிட்டார்கள்.

### "கௌரவ சமாதானமாம்"

நிக்ஸன் சொல்லிக்கொள்ளலாம். "சமாதானத்தை கௌரவத்தோடு" அடைந்துவிட்டதாக. ஆனுல், அதற்கு அவன் கொடுத்த காசு எவ்வளவு

(4-ம் பக்கம் பார்க்க)

## விலைவாசி உயர்வை எதிர்த்து மே. உத்தரப்பிரதேசத்தில் மறியல்

புதுடெல்லி, மார்ச். 13—

விலைவாசி உயர்வுக்கெதிராகவும், விவசாயத் தொழிலாளிகளுக்கு நாளொன்றுக்கு குறைந்தபட்சக் கூலியாக ஐந்து ரூபாய் நிர்ணயிக்கக் கோரியும், விவசாயத் தொழிலாளிகளுக்கு வீட்டுமனை வழங்கக் கோரியும், இதர கோரிக்கைகளுக்காகவும் மேற்கு உத்தரப் பிரதேசத்தில் மார்ச் முதல் வாரத்திலிருந்து மறியல் போராட்டம் நடைபெற்று வருகிது.

இந்திய கம்யூனிஸ்ட்கட்சியின் (மார்க்சிஸ்ட) மேற்கு உத்தரப்பிரதேசக் கமிட்டியும், அகில இந்திய விவசாய சங்கத்தின் பிரதேசக் கமிட்டியும் கூட்டாக இந்த மறியல் போராட்டத்தைநடத்துகின்றன.

மறியல் போராட்டத்திற்கு முன்பாக பல்வேறு பிரச்சார குழுக்கள் கிராமம் கிராமமாகச் சென்று இக் கோரிக்கைகளைப் பற்றி விளக்கப் பிரச்சாரம் நடத்தினுர்கள், 15 ஆயிரம் கோரிக்கைப் பிரதிகள் வினியோகிக்கப்பட்டன. இதற்குப் பின்னர் மார்ச் முதல்நாளில் அலிகார் மாவட்டத்திலும், சஹரன்பூர் பிஜ்னோர், மீரட், புலந்சாஹர், மதுரா முதலிய மாவட்டங்களில் மார்ச் 5-ந் தேதியிலிருந்தும் மறியல் போராட்டம் நடைபெற்று வருகிறது.

முஸாபர்நகர் மாவட்டத்தில் இன்றுவரை வந்துள்ள தகவல்படி 400 தோழர்கள் மறியல் செய்தனர்; 132 தோழர்கள் கைதுசெய்யப்பட்டுள்ளனர்.

பிஜ்னோர் 200 தோழர்கள் மறியல்—118 கைது. மீரட் 150 தோழர்கள் மறியல்—72 கைது, புலந்சாஹர் 200 தோழர்கள் மறியல்—137 கைது, அலிகார் 100 தோழர்கள் மறியல்—30 கைது, மதுரா 40 தோழர்கள் மறியல—7 கைது ஆக 1100 தோழர்கள் மறியல் செய்தனர்; 526 தோழர்கள் கைது செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டுள்ளனர். இவர்களுக்கு 10 தினங்கள்முதல் 30 தினங்கள் வரை கடுங்காவல் தண்டனை கொடுக்கப்பட்டுள்ளது. சஹரன்பூர் மாவட்டத்திலிருந்து கைது செய்யப்பட்டவர்கள் எண்ணிக்கை இன்னும் வரவில்லை.

போராட்டத்தில் ஈடுபட்ட தொண்டர்களுக்கு மாநிலக்கமிட்டி வாழ்த்துக் கூறி, கிளர்ச்சிப் பிரச்சார வேலைகளை தொடரும்படிக் கேட்டுக்கொண்டுள்ளது.

## கரன்சிங் ராஜினுமா ஏற்கப்படவில்லை

புதுடெல்லி மார்ச். 18—

அவ்ரோ விமானம் நொறுங்கியதற்கு அமைச்சர் கரன்சிங் பொறுப்பாளர் அல்ல என்றும், அவருடைய சேவை மத்திய அரசுக்கு தேவை என்றும். ஆகவே அவரது ராஜிமாவை ஏற்க முடியாது என்றும் பிரதமர் இந்திரா காந்தி அறிவித்தார்.

## யானைப் பசிக்கு சோளப் பொரி

சென்னை, மார்ச். 16—

நடக்கும் சம்பா அறுவடையில தமிழகத்திலிருந்து இந்திய உணவுக் கார்ப்பரேஷன் 40 ஆயிரம் டன் தானயம் மட்டுமே கொள்முதல் செய்துள்ளது.

இதில் 35 ஆயிரம் டன் அரசு நிறுவனம் மூலமாகவும், 5 ஆயிரம் டன் பகிரங்க மார்க்கெட் மூலமாகவும் வாங்கப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

## லே-ஆப்-க்கு முழுச் சம்பளம்

### டான்சி தொழிலாளர் கோரிக்கை

சென்னை, மார்ச் 18—

மின்வெட்டு காரணமாக, பாதிக்கப்பட்ட 'டான்சி' தொழிலாளர்களுக்கு முழுச் சம்பளம் அளிக்கக்கோரி, டான்சி தொழிலாளர் சம்மேளனம் சார்பில் நிறுவன மானேஜிங் டைரக்டரைச் சந்தித்து பிப். 26-ல் மகஜர் ஒன்று அளித்தனர்.

அந்த மகஜரில், பாதிக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு முழுச்சம்பளம் அளிக்கக் கோரியும். ஜெனரேட்டர்கள் வரவழைத்து எல்லாத் தொழிலாளர்களுக்கும் வேலை அளிக்கும் படியும் வலியுறுத்தப்பட்டிருந்தது.

தமிழ்நாடு சிறு தொழில் நிறுவனத் தொழிலாளர் சம்மேளனச் செயலாளர் தோழர் சி பி தாமோதரனும் மற்றும் சேலம் திருச்சி, கிண்டி பகுதிகளிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகளும் மானேஜரைச் சந்தித்து இந்த மகஜரை அளித்தனர்,

இக்கோரிக்கைகளைப் பரிசீலித்து அமுல் நடத்த முயற்சிப்பதாக டைரக்டர் உறுதி கூறினுர்,

## "பட்டம்கொடுத்தால் போதுமா? வேலைகொடுக்க வேண்டாமா!"

### சென்னை பட்டமளிப்பு விழாவில் மாணவர் சங்கம் ஆர்ப்பாட்டம்

சென்னை. மார்ச் 18—

நேற்று (சனிக்கிழமை) இங்கு நடைபெற்ற சென்னைப்பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவின் போது இந்திய மாணவர் சங்கம் சார்பில் ஆர்ப்பாட்டம் நடந்தது.

இந்தப்பட்டமளிப்பு விழாவில் கவர்னர் கே கே ஷா கலந்துகொண்டு சிறப்புரையாற்றினுர்.

பட்டமளிப்பு விழா துவங்கியதும், பல்கலைக்கழகக் கட்டிடத்துக்கு எதிர்பிளாட்பாரத்தில் நின்று அமைதியான முறையில் முழக்கம் எழுப்பினர்.

"பட்டம் கொடுத்தால் போதுமா? வேலை கொடுக்க வேண்டாமா! பட்டம் வேண்டாம்! வேலை வேண்டும்! வேலை கிடைக்கும்வரை உதவித் தொகை கொடு!" என்று முழக்கம் எழுப்பினர்.

அமைச்சர் நெடுஞ்செழியன் கார் வந்தபோதும் கவர்னர் கே கே ஷா வந்தபோதும் 'திரும்பிப்போ!' என்று முழக்கம் எழுப்பினர்.

பட்டமளிப்பு விழாவில் பேசிய கவர்னர், மாணவர் சங்கம் சார்பில் நடந்த ஆர்ப்பாட்டம்பற்றிக் குறிப்பிட்டார்.

தான் திரும்பிப்போய் விடுவதால் பிரச்னைக்குத் தீர்வு ஏற்பட்டு விடுமா? என்று கேட்டார்.

மாணவர்களே பட்டமளிப்புவிழாவை விரும்பாத போது இவ்விழாவை நடத்துவது சரியா என்று பல்கலைக்கழக துணைவேந்தரை, தான் கேட்பதாகக் கூறினுர்.

மாணவர்கள் விரும்பாத போது, பட்டங்களை அஞ்சல் மூலம் அனுப்பி விடலாமே என்ருர்.

## சிவகாசி ஊராட்சி ஒன்றியம் மீது அரசின் கொடுவாள்

சென்னை, மார்ச். 18—

சிவகாசி ஊராட்சி ஒன்றியத்தை தமிழக அரசு இன்று கலைத்துள்ளது. ஜூன் 17-ல் மீண்டும் இச்சபை திருத்தியமைக்கப்படும் என கூறப்பட்டுள்ளது.

உறுப்பினர்கள் சபை நடவடிக்கைகளுக்கு முட்டுக்கட்டையாக இருந்தனர் என்றும், இதனுல் அவலுவல்கள் சரிவர மேற்கொள்ளப்படவில்லையாதலால் சபையைக் கலைத்துவிட்டதாகவும்இன்று வெளியிடப்பட்ட அரசு கெஜட் கூறுகிறது,

## பாண்டிசேரிக்கு அனல்மின் நிலையம்

பாண்டிச்சேரி, மார்ச். 18—

யூனியன் பிரதேசமான பாண்டிச்சேரியில் இரண்டு புதிய அனல் மின்சார நிலையங்கள் அமைக்கப்படவிருக்கின்றன. இவை இரண்டும் 60 மெகாவாட் சக்தியுள்ள மின்சாரத்தை உற்பத்தி செய்யும் என புதுவை அமைச்சர் டி ராமச்சந்திரன் அறிவித்துள்ளார்.

# தீக்கதிர்

## கபட நாடகம்

மீண்டும் "பிற்போக்கு சக்தி தலைதூக்கி விட்டது" என்ற பல்லவி பாட ஆரம்பித்துவிட்டார் இந்திரா காந்தி. எந்தச் சூழ்நிலையில்?

புதிய வரிகள் மூலமும், பற்றுக்குறை பட்ஜெட் மூலமும் இவ்வாண்டு சுமார் ரூ 550 கோடிக்கு மேல் புதிய சுமையை மக்கள்மீது சுமத்திவிட்டு இந்தப் பல்லவி.

"இந்த வலதுசாரி பிற்போக்கு சக்திகளுக்கும், இடதுசாரி கம்யூனிஸ்டுகளுக்குமிடையே ஒரு அசாதாரணமான கூட்டு ஏற்பட்டுள்ளது. இன்று ஜனசங்கத்தின் நண்பர்களாக இடது கம்யூனிஸ்டுகள் காட்சியளிக்கிறார்கள். முஸ்லிம்கள், கிருஸ்தவர்கள் ஆகியோரின் நலன்களுக்குப் பாடுபடுவதாக ஜனசங்கம் காட்சியளிக்கிறது"

லக்னோ சுமணபுரியில் இந்திரா காந்தி பேசிய பேச்சு.

இப்படிப்பட்டதொரு நயவஞ்சக—கபட நாடக அரசியல் சென்ற 25 ஆண்டுகளாகவே நடத்தப்பட்டு வருகிறது இதில் கைதேர்ந்த நபர் இந்திரா காந்தியே. காரணம 'பிற்போக்குசக்திகள் தலைதூக்கிவிட்டன' என்ற அம்மையாரின் திசைதிருப்பும் குரல் வெளிவருவதற்கு ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் முன்பே வலது கம்யூனிஸ்ட் ஏடான "நியூ ஏஜி"லும் 'ஜனசக்தி'யிலும் கம்யூனிஸ்ட் முத்திரையுடன் இந்த குரல் ஒலிக்கும்படி பார்த்துக் கொள்ளும் சாதுரியம் மற்றவர்களைவிட இந்திராவுக்கே அதிகமுண்டு.

வலது பிற்போக்கு அபாயம் மீண்டும் தலைதூக்கி விட்டது என்ற தத்துவ விளக்கங்கள் மேற்கூறிய ஏடுகளில் அபரிமிதமாக பம்பாய் நகர நகரசபை தேர்தலுக்குப் பிறகு வெளிவருகின்றன.

இதற்குப் பொறுப்பாளி யார்? பதவியிலிருப்பது யார்? அருந்தது யார்? காங்கிரஸ் கட்சியே. அதனை பம்பாயில் மட்டுமல்ல, ஆமதாபாத்தில, பாரூரில—நீலசுவரத்தில், ஒரிசாவில் மோமுகம்—மறைமுகத தேர்தல்களில மக்கள் முறியடித்ததேன?

டெல்லியில — அரியானாவில் — பஞ்சாப்—பீஹார் ராஜஸ்தான் — கேரளா ஆகிய பல மாநிலங்களில ஆசிரியர்களின் கிளர்ச்சி வெடித்தது ஏன்? அதுபோல் தமிழ்நாட்டிலும அததகைய ஒரு போராட்டம தோன்றியது ஏன்?

இவை மார்க்சிஸ்ட் கட்சி தூண்டிவிட்டவை — அல்லது ஜனசங்கம தூண்டி விட்டவை என்று யாராவது கூறுவார்களேயானால், போராடும் மேற்கூறிய ஆசிரியர்கள் தம்மீது கூறப்படும் 'அவதூறு' என்ற பதில் கூறுவர். காரணம அவர்களில பெரும்பாலோர் நேற்று வரை — ஏன இன்றுங்கூட இந்திரா காந்தியின அரசியலை ஏற்றுக் கொண்டவர். ஆனல் இன்று இந்திராவுக்கும் கருணாநிதிக்கும் எதிராகப் போர்க்கொடி உயர்த்தியுள்ளனர்.

காரணம் இன்று தங்களது வருவாயைக் கொண்டு வாழ்க்கையை நடத்த முடியாத வகையில் விலைவாசிகள் உயர்வு

என். ஜி. ஓ. க்கள், மத்திய அரசு ஊழியர்கள். தொழிலாளிகள், மாணவர்கள், பெண்டிர் இவ்வாறுக சகல பகுதி மக்களும் போர்க்கொடி உயர்த்தியுள்ளனர்.

மின்வெட்டு — விளைவு! லே-ஆப். மண்ணெண்ணை இல்லை. பெண்கள் ஊர்வலம். கண்ட்ரோல் விலையில சீனி இல்லை — உணவுமில்லை. பயங்கர விலைவாசி உயர்வு. படித்தவர்க்கு வேலையில்லை.

இந்த நிலைமையை உருவாக்கிய இந்திரா ஆட்சி மீது அதிருப்தி — ஆவேசம், கண்டன முழக்கம், ஆர்ப்பாட்டங்கள், வேலை நிறுத்தங்கள்.

இவர்களுக்குத் தரப்படும பதில்? தடியடி — துப்பாக்கிச்சூடு — சிறைச்சாலை.

பம்பாயிலும் ஏனைய இடங்களிலும் மக்களின் ஆத்திரம் ஆவேசம் மாற்றுக கட்சியினரைத் தேர்ந்தெடுக்கும் தேர்தல முடிவுகளாக வெளிவருகின்றன.

குறிப்பாக முற்போக்கு ஜனநாயக சக்திகள் பல வீனமாக உள்ள இடங்களில ஜனசங்கம், சிவசேனை வெற்றி பெறுகின்றன.

கேரளத்தில் முஸ்லிம் லீக்குடன் கைகோர்த்து நிற்கும் காங்கிரசின் பிற்போக்குத்தனத்தை விட ஜனசங்கத்தின பிற்போக்குத்தனம் மோசமானதாக மக்களுக்கு படவில்லை போலும். விரும்பத் தகாத இந்நிலையை உருவாக்கியதற்குப் பொறுப்பாளி யார்? காங்கிரசே. சிவசேனையை திட்டமிட்டு வளர்த்தது மராட்டிய முதலமைச்சர் விபிநாயக் அல்லவா?

குஜராத்திலும், ஒரிசாவிலும், பீகாரிலும், உத்தர பிரதேசத்திலும் சுதந்திரா, ஜனசங்கம் எம் எல் ஏக்களையே தம் உறுப்பினர்களாக சேர்த்துக் கொண்டு மந்திரி சபை அமைத்திட்ட காங்கிரசின பிற்போக்குதனம் உலகப் பிரசித்தி பெற்றது.

ஆந்திரத்தில் தலைதூக்கியுள்ள பிரிவினைவாதப் பிற்போக்கு சக்தி "எந்த வட்டாரத்திலிருந்து துவங்கியது என்பது வலதுகளுக்கும் இந்திராவுக்கும புரியாத—தெரியாத நிகழ்ச்சியா?

மார்க்சிஸ்டுகளைப் பொறுத்தவரையில் ஜனசங்கம் "ஆட்டுத் தோல் போர்த்திய ஓநாய்" என்பதினை இந்திரா காந்தியிடமிருந்து கற்றுக்கொண்டவர்களல்ல.

இந்திரா காந்தியின் பிற்போக்குத்தனத்தை எதிர்க்கும அதே சமயத்தில சுதந்திரா—சிண்டிகேட்—ஜனசங்கத்தின பிற்போக்கையும் எதிர்த்து வருபவர்கள் என்பது இந்திரா காந்திக்குத் தெரியாத உண்மையல்ல. தெரிந்திருந்தும "குலாம் காதருக்கும கோகுலாஷ்டமிக்கும் சம்பந்தம்" கூற இந்திரா காந்தி முயல்வது தன்னுடைய டாட்டா பிர்லா சேவையை — மக்கள் மீது பயங்கர வரி விதிப்பு யுத்தம் தொடுத்திருப்பதை மூடிமறைக்கச் செய்யும் கபடநாடகமாகும்.

1971-ல் அது வெற்றி பெற்றது. இன்று கட்டப்பது 1971 அல்ல. சவானின் 73 ஆண்டு பட்ஜெட்டுக்கு பிந்திய காலமாகும்.

---

### மின் வாரியத்தில்

# 10 ஆயிரம் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்ய சதி

## து. ஜானகிராமன் அறிக்கை

சென்னை, மார்ச் 17—
மின்வெட்டை அடுத்து தமிழ்நாட்டில் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் லே-ஆப் அல்லது வேலை நீக்கம் செய்யப்படுகின்றனர். பாதிக்கப்படும் தொழிலாளர்களுக்கு முழு நிவாரணம் கொடுக்க அதன் முதலாளிகளும், தமிழக அரசும் முன் வரவேண்டுமென தொழிலாளி வர்க்கம் கடுமையாகப் போராடி வருகிறது. இதற்கு தலைமை தாங்கும் சி ஐ டி யூ அனைத்து தொழிற்சங்க ஒற்றுமைக்கும் இடை அறைகூவல் விடுத்து வருகிறது.

### இருள் சூழும் நிலை

இந்த நிலையில் தமிழக அரசின் நேரடி நிர்வாகத்தில் உள்ள மின்வாரியத்தில் 10 ஆயிரம் தொழிலாளர்களை ஏப்ரல் முதல் தேதியிலிருந்து நீக்கப்போவதாக மின்வாரிய அதிகாரிகள் கூறிவருகின்றனர். மின் தட்டுப்பாட்டை நீக்க இந்த மனித சக்திகளை எப்படியேனும் பயன்படுத்துவதென்பதை விட்டு, ஏற்கனவே செய்து வரும் வேலையிருந்தும தொழிலாளர்களை நீக்கி ஊருக்கு ஒளி கொடுத்தவர்கள் வாழ்க்கையில் இருள் மயமாக்க நினைக்கின்றனர்.

### தலைகுனிய வைக்கும் செயல்

சுமார் 2 லட்சம் பழைய மின்சார கட்டண பில்களை எழுதி அனுப்ப ஆட்கள் இல்லையென்று கூறி பல கோடி ரூபாய் வருமானம் வர முடியாமல் நஷ்டத்தை ஏற்படுத்தி வருகிறது தமிழக அரசு. ஏற்கனவே, 2000 கிளார்க்குகள் தேவையென்று விளம்பரப்படுத்தி அதற்கான தேர்வு என்று நாடகம் ஆடி, ஏராளமான சிபார்சுகள் அரசு தரப்பிலிருந்து வந்துள்ளதால் சிக்கல் ஏற்பட்டு இன்னமும அந்தத் தேர்வு முடியாமல் முட்டுக்கட்டை எடுத்து வருகிறது. ஆனல், ஆயிரக் கணக்கில் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்வதென்று மறுபக்கம் அரசு முடிவு செய்வது மிகவும் வெட்கக் கேடானதாகும்.

### நோத்திற்கு ஒரு பேச்சா?

வலதுசாரி கம்யூனிஸ்ட் தலைமையில் இருக்கும் சம்மேளனம் கோரிக்கைகளுக்கு தொழிலாளர்களை ஒன்று திரட்டிப் போராட முன்வராமல் மகாநாடு கூட்டி முதல்வருக்கு மாலை போட்டு செஞ்சி கை கட்டி சமீபத்தில் நின்றது. அதில் கலந்துகொண்ட முதல்வர் தற்போது 8000 தொழிலாளர்கள் நிரந்தரமாக்கப்பட்டுள்ளனர் என்றும், இனியுள்ள 30,000 பேர்களும் அடுத்தடுத்து நிரந்தரமாக்கப்படுவர் என்றும், ஒரு நாளும் ஒரு தொழிலாளியும் வேலை நீக்கம் செய்யப்பட மாட்டார் என்று "வாக்களித்த"வர், அந்த உதடுகள் மூடுவதற்கு முன்னல் 10 ஆயிரம் பேர்களை வேலை நீக்கம செய்ய எத்தனிப்பது எவ்வளவு வேடிக்கையும், வேதனையானதும் என்பதை உணரவேண்டும்.

### ஒன்றுபடுக

இந்த பயங்கர தாக்குதலிலிருந்து தொழிலாளர்களை பாதுகாக்க, இனியும்கௌரவம் பார்க்காமல் அனைத்து சங்கங்களும்,மத்திய ஸ்தாபனங்களும ஒன்றுபட்டு போராட வாருங்கள் என்று தமிழ்நாடுமின்தொழிலாளர் மத்திய அமைப்பு அறைகூவல்விடுகிறது.

மத்திய அமைப்பைச் சார்ந்த மின்சாரத் தொழிலாளர்கள் தங்களுடைய வேலை உத்திரவாதத்தைப் பாதுகாத்துக்கொள்ள ஒரு வினடியும் சாத்திராமல் ஒன்றுபட்டு அணிதிரண்டு போராட்டம் நடத்தி-தீர்மானங்கள் நிறைவேற்றி தமிழக அரசிற்கும்,மின் வாரியத்திற்கும் அனுப்பிடவும், சி ஐ டி யூ சகோதர சங்கங்கள் இந்த நியாயமான போராட்டத்திற்கு பூரண ஆதரவு கொடுக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப்படுகிறது.

---

### சமயநல்லூரில் மின்வெட்டை எதிர்த்து ஆர்ப்பாட்டம்

சமயநல்லூர், மார்ச். 15—
தற்பொழுது ஏற்பட்டுள்ள மின் வெட்டு, விலைவாசி உயர்வு, வரிச்சுமை, ஆகியவற்றை எதிர்த்து சமயநல்லூரில் மார்ச் 2-ம் தேதி ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது.

ஆர்ப்பாட்ட ஊர்வலத்திற்கு ஏராளமான மக்கள் கலந்துகொண்டனர். தோழர்கள் மா. செந்திவடிவேல். எல். சிவசுப்பிரமணியன் தலைமை தாங்கினர்.

### நீடாமங்கலத்தில் பொதுக்கூட்டம்

நீடாமங்கலம், மார்ச், 16—
மன்னை தாலுகா நீடாமங்கலத்தில் மார்க்சிஸ்ட் கட்சியின் பொதுக்கூட்டம் மார்ச் 13ல் தோழர் பி சேவு தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் ஏ.நடராஜன், கோ. பாரதிமோகன், வி.கே. முத்துச்சாமி ஆகியோர் மின்வெட்டு, விலைவாசி உயர்வு, மத்திய—மாநில, அரசுகளின் அடக்குமுறை பற்றி பேசினர். பின்னர் மதுரை குமார் குழுவினரின் இசையோடு கூட்டம் நிறைவுற்றது.

---

### சிறுமுகையில்

# நெசவாளர் மறியல் 200 பேர் கைது

கோவை, மார்ச். 16—
கோவை மாவட்டம் சிறுமுகைப் பகுதியிலுள்ள நெசவாளர்கள் நூல் விலை உயர்வைக் கண்டித்து மார்ச் 10-ம் தேதி முதல் வேலைநிறுத்தம் செய்து, மறியல் போராட்டத்திலும் ஈடுபட்டு வருகின்றனர். இது வரை 200-க்கும் மேற்பட்டோர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

சிறுமுகையிலும், அதனைச் சுற்றியிலுமுள்ள கிராமங்களிலும் 5000க்கு மேற்பட்ட நெசவாளர் குடும்பங்கள் உள்ளன. சமீபகாலங்களில் நூல் விலை மிக அதிகமாக உயர்ந்துவிட்டதாலும், சரிவர நூல் கிடைக்காமையினாலும், அகவிலை உயர்வாலும் நெசவுத் தொழிலுக்கு பெரும் பாதிப்பு ஏற்பட்டுள்ளது. இதற்குத் தீர்வுகாண நெசவாளர்கள் ஒன்று சேர்ந்து நெசவாளர் சங்கம் அமைத்து தீவிரமாகக் குடும்பத்தோடு போராடி வருகின்றனர்

நெசவாளர்கள் மார்ச் 10-ம் தேதியிலிருந்து வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர். அதைத் தொடர்ந்து மார்ச் 12-ம் தேதி முதல் முதல் மேட்டுப்பாளையம் துணைத் தாசில்தார் அலுவலகம் முன் மறியல் செய்து வருகின்றனர்.

இதுவரை சிறுமுகை, மூலத்துறை, இலுப்பபாளையம், மூக்கனூர் ஆகிய ஊர்களைச்சார்ந்த 200க்குமமேற்பட்ட நெசவாளர்கள் மறியல் செய்து சிறைபுகுந்துள்ளனர். தினசரி மறியலுக்கு முன் 2000 பேர்கள் கொண்ட ஊர்வலம் நடைபெற்று வருகின்றது. இதில் நெசவுத்தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்களும் தங்கள் குழந்தைகளுடன் கலந்து கொள்கின்றனர்.

சைத்தறி நெசவுத்தொழிலாளர் போராட்டத்துக்கு விஸ்சோஸ் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிளையும் விஸ்மோஸ் சி ஐ டி யூ. தொழிற் சங்கமும் முழு ஆதரவளித்து வருகின்றன.

### 'எங்களுக்கும் கொடு'

சென்னை, மார்ச் 17—
தற்பொழுது மேற்கு வங்கத்தில் நடைபெறும் குடிசை அபிவிருத்தி பணிகளுக்கு மத்திய அரசு நிதி உதவி அளிக்கிறது.

இதே போன்று தமிழகத்தில் நடைபெறும் குடிசை அபிவிருத்தி பணிகளுக்கும் நிதி அளிக்க வேண்டுமென தமிழக அரசு மத்திய அரசினைக் கோரியுள்ளது.

---

## தி. மு. க. தாக்குதலுக்கு கண்டனம்

# கோவை கலெக்டர் அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம்

கோவை, மார்ச். 17—
தொழிற் சங்கங்களின் மீது தி. மு. கழகமும், அதன் அரசும் தொடுத்துவரும் தாக்குதல்களைக் கண்டித்து மார்ச் 14ல் கோவை மாவட்டக் கலெக்டர் அலுவலகம் முன் சி ஐ டி யூ சங்கங்கள் சாரபில் பெரும ஆர்ப்பாட்டம் நடந்தது

அன்று காலை 11 மணிக்கு மில் தொழிலாளர்கள் சங்கத்திலிருந்து பெரும் தொழிலாளர் ஊர்வலம் புறப்பட்டது. இந்த ஊர்வலத்துக்கு தோழர்கள் எம். நஞ்சப்பனும். டி. பாலனும தலைமைவகித்தனர்.

மூங்கில் துறைப்பட்டில் உள்ள கள்ளக்குறிச்சி சர்க்கரை ஆலைத தொழிலாளர் போராட்டதை உடைத்து அவர்களது தொழிற் சங்கத்தைக் கைப்பற்ற திமுகழகமும், அரசும் போலீஸ் உதவியுடன் சில ரவுடிகளை ஏவி விட்டு, தொழிலாளர்கள் மீதும், தொழிற் சங்கத் தலைவர்கள் மீதும் நடத்திய பயங்கர தாக்குதலைக் கண்டித்துப், போராடும் தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவித்தும், பட்டதாரி ஆசிரியர்களின் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவித்தும், நெசவாளர்களின் கோரிக்கைகளை ஆதரித்தும் முழக்கங்கள் எழுப்பப்பட்டன.

ஊர்வலம் நகரின் முக்கிய வீதிகள் சென்று கலெக்டர் அலுவலகம் வந்தடைந்ததும, அங்கு தங்களது கோரிக்கைகளுக்காக உண்ணாவிரதமிருந்த பட்டதாரி ஆசிரியர்கள் சரவொலி எழுப்பி ஊர்வலத்தை வரவேற்றது உற்சாகமளிப்பதாக இருந்தது.

தோழர்கள் எம். நஞ்சப்பனும், டி. பாலனும் கலெக்டர் இல்லாததால் அவரது நேர்முக உதவியாளரிடம் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் மீதும், தலைவர்கள் மீதும் நடத்தப்பட்ட தாக்குதலுக்குக் கண்டனம் தெரிவிக்கும் கோரிக்கைகளை நிறைவேற்றும்படி வலியுறுத்தும் கோரிக்கை மனுவை அளித்தனர்.

அதன் பின் நடந்த கூட்டத்தில், தோழர்கள் எம். கோவிந்தனும், டி. பாலனும் பேசினர்.

### நெல்லையில் மறியல்

நெல்லை, மார்ச். 17—
மார்ச் 20-ல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மறியல் போராட்டம் நடத்துகிறது, இந்த போராட்டம மத்திய மாநில அரசு அலுவலகங்கள முன்பு நடைபெறும்.

#### மறியல் நடைபெறும் இடங்கள்

கொக்கிரகுளம், அம்பா சமுத்திரம், செங்கோட்டை தென்திருப்பேரை, உடன்குடி, தூத்துக்குடி விளாத்திகுளம, கோவில்பட்டி, சிவகிரி முதலியன.

### மாநிலங்களவையில் பன்சிலால் ஊழல்

புதுடெல்லி, மார்ச் 16-
அரியானா மாநிலத்தைச் சேர்ந்த காங்கிரஸ் முதலமைச்சர் பன்சிலால் மீதுள்ள ஊழல் குற்றச்சாட்டுகள் பற்றி இன்று மாநிலங்களவையில் கேள்வி எழுப்பப்பட்டது.

காரசாரமான விவாதத்திற்குப்பின் இப்பிரச்னையை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள மாநிலங்களவை ஒத்துக்கொண்டுள்ளது.

### மாநிலங்களுக்கு நிதி ஒதுக்கீடு

புதுடில்லி, மார்ச் 14—
1973—74-ஆம் ஆண்டுக்கான ஆண்டுத் திட்டத்தில் மத்தியஅரசு மாநிலங்களுக்காக நடப்பு நிதியாண்டைவிட ரூ 351 கோடி அதிகமாக ஒதுக்கப்பட்டுள்ளது என்று இன்று மக்களவையில் பகவதஜா ஆஜாதின் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கையில் மத்திய, திட்ட ஸ்டேட் அமைச்சர் மோகன்தாரியா கூறினர்.

தாரியா, மேலும் 1973—74—ம் ஆண்டில மாநிலங்கள் ரூ 981 கோடி ஒதுக்க ஒப்புக்கொண்டுள்ளதாக கூறினர். 1972—73ம ஆண்டில் இது ரூ 871கோடியாக மட்டுமே இருந்தது.

---




# சட்ட அமைச்சர் நடவடிக்கை எடுப்பாரா?

ஐயா,

மதுரை மாவட்டம் பழனி வட்டம் ரெட்டயம்பாடி பிர்க்காவிலுள்ள இரவிமங்கலம் கிராம புலத்தில் சர்வே எண் 286-ல, 185 ஏக்கர், 45 செண்ட் புஞ்சை நிலம் இருக்கிறது.

இந்த சர்வே எண் 286 விஷயமாக, நெய்க்காரபட்டி எஸ்டேட்டுக்குச் சொந்தமான நெய்க்காரப்பட்டி டைரீஸ் பிரைவேட் லிமிடெட்டுக்கும், அந்த நிலத்தில் பரம்பரையாக சாகுபடி செய்துவந்த விவசாயிகள் சுமார் 46 பேர்களுக்கும் தகராறு ஏற்பட்டது. அந்த சர்வே எண் 286, விஷயமாக திண்டுக்கல் சப்-டிவிஷனல் மஜிஸ்ட்ரேட் கோர்ட், திண்டுக்கல் செஷன்ஸ்—கோர்ட், சென்னை ஹைகோர்ட் ஆகிய கோர்ட்களில் வழக்குகள் நடைபெற்றன, ஷை கோர்ட்டுகள் அனைத்தும் விவசாயிகளுக்குசாதகமாக தீர்ப்புகள் வழங்கியுள்ளன.

நெய்க்காரபட்டி டைரீஸ் பிரைவேட் லிமிடெட்டின் டைரைக்டர் திரு என்.ஆர். ராமனுஜ அய்யங்கார் அனைத்து கோர்ட் தீர்ப்புகளை மீறி, சர்வே எண் 286க்குரியநிலம நெய்க்காரப்பட்டி டைரீஸ் பிரைவேட் லிமிடெட்க்குததான் சொந்தம் என்று கூறி, ஐந்து நபர்களைப்பிடித்து அந்த டைரீஸ் பிரைவேட் லிமிடெட்டின்பெயருக்கு26-1-71 தேதியிட்டு குத்தகை முச்சலிக்கை எழுதி வாங்கியுள்ளார். டைரக்டர் என். ஆர். ராமானுஜஅய்யங்கார் மீது நடவடிக்கை எடுக்கக் கோரி மாநில சட்ட அமைச்சருக்கு 6—5—72ம் தேதி தெரியப்படுத்தியுள்ளேன்.

அதன்படி பழனி காசில்தார் 29—6—72 தேதியிட்ட ந க எண் 18-1826-ஆர் 72 உள்ள சம்மன் அனுப்பினர். அந்த சம்மனில் 10—7—72ம தேதி நேரில் ஆஜராகும்படி தெரியப்படுத்தியிருந்தது. அதன்படி நான் குறிப்பிட்ட தேதியில் ஆஜராகி சாட்சியம் கூறியும, கோர்ட்டு தீர்ப்புகளையும் தாக்கல் செய்தேன்.

எனவே விசாரணை முடிவடைந்து 6 (ஆறு) மாதங்களுக்கு மேல் ஆகியும இன்றுவரை தீர்ப்பு கிடைக்கவில்லை.

ஆதலால், சட்ட அமைச்சர் இது விஷயத்தை ஆவன செய்து நீதி கிடைக்க ஏற்பாடு செய்யும படி கேட்டுக்கொள்கிறேன்.

இப்படிக்கு,
என். சுப்புராயுலு,
தலைவர்,
காவலப்பட்டி பஞ்சாயத்து

---

### பருவ மழை ஆராய்ச்சி

## இந்திய - சோவியத் ஒத்துழைப்பு

புதுடில்லி, மார்ச். 17—
இவ்வாண்டில் ஏப்ரல் முதல் ஆகஸ்டு வரை, அரபுக் கடல் பிரதேசத்திலும், இந்தியாவின் மேற்குக் கடற்கரைப் பிரதேசத்திலும் பருவ மழையின் நிலவரம் பற்றி இந்திய - சோவியத் வானிலை ஆய்வாளர்கள் கூட்டு ஆராய்ச்சிகளை நடத்துவார்கள்.

பருவ மழையின் வருகையை முன்கூட்டியே அறிவிக்க வேண்டும் என்று இந்திய வானிலையாளர்கள் பல ஆண்டுகளாக முயன்று வருகின்றனர். ஆனல். நம்பகமான வானிலை அறிவிப்பு முறைகளைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

சாதாரணமாக, மே மாதக் கடைசியில அல்லது ஜூன் மாத ஆரம்பத்தில், இந்தியாவின மேலைக் கடற்கரையில் பருவ மழை தொடங்குகிறது. மூன்று வார காலத்தில் அரபுக கடலில இருந்து பலமான புயல் காற்றுடன் இந்தியாவின் மேலைக் கடற்கரையில பருவ மழை பிந்தினல், பெய்யும் மழையின அளவும் குறைகிறது. இதனல் விவசாயத்திற்குப் பாதகம் ஏற்படுகிறது.

எனவே, அரபுக் கடலிலும், இந்தியாவின மேற்குக் கடற்கரையிலும், பருவ மழை நிலவரம் குறித்து, நான்கு சோவியத் கப்பல்களில் சோவியத் நிபுணர்களும், இந்திய நிபுணர்களும் ஆராய்வார்கள். பம்பாயல் இந்திய ஆராய்ச்சியாளர்களை ஏற்றிக்கொண்டு, சோவியத கப்பல்கள் அரபுக கடலிலும, மேற்குக் கடற்கரைப பிரதேசத்திலும் பருவ மழை நிலவரம் பற்றிய வானிலை ஆராய்ச்சிகளில் ஈடுபடும்.

---

# 2 ஆயிரம் பொறியாளர் ஆர்ப்பாட்டம்

சென்னை, மார்ச் 17—
பொதுப்பணித்துறை என்ஜினியர்கள் 2 ஆயிரம் பேர் "கோரிக்கை தின கிளர்ச்சி" நடத்துகிறார்கள். மார்ச் 14-ந்தேதிமுதல் 20ந் தேதி வரை இந்த கிளர்ச்சி நடக்கிறது.

சென்னையில் பொதுப்பணித்துறை என்ஜினியர்கள் 450 பேரும், மதுரையில் 220 பேரும், தஞ்சையில் 220 பேரும, பொள்ளாச்சியில் 160 பேரும், திருச்சியில் 140 பேரும, கோவையில் 110 பேரும், சேலத்தில் 100 பேரும், தென்ஆற்காட்டில் 90 பேரும. ராமநாதபுரத்தில் 80 பேரும், கன்னியாகுமரி மாவட்டத்தில் 40 பேரும், திருநெல்வேலியில் 50பேரும அன்றுகறுப்பு சின்னம் அணிந்து கோரிக்கை நாள் அனுஷ்டிக்கின்னர்.

15-ந் தேதியன்று முதலமைச்சருக்குதங்கள கோரிக்கையை வலியுறுத்தி என்ஜினியர்கள் அஞ்சல் அட்டை எழுதி அனுப்பினர்.

16-ந் தேதியன்று முதலமைச்சருக்கு மகஜர் அனுப்பப்பட்டது.

20-ந் தேதி சென்னையில் ஊர்வலமும. கூட்டமும் நடைபெறும். இதில் தமிழ் நாடு முழுவதும் உள்ள பொதுப் பணித்துறை என்ஜினியர்கள் கலந்து கொள்வார்கள்.

### தாமபுரியில் விவசாய ஆராய்ச்சி நிறுவனம்

சென்னை, மார்ச். 16—
தர்மபுரியில விவசாய ஆராய்ச்சி நிறுவனம் ஒன்றை நிறுவப் போவதாக, கேள்வி நேரத்தின் போது தமிழக சட்டப் பேரவையில் விவசாய அமைச்சர் அறிவித்தார்.

---

### திருமங்கலம்-உசிலம்பட்டி தாலுகாவில்

# கட்சி-தீக்கதிர் வளர்ச்சி நிதி

## (முதற் பகுதி)

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வளர்ச்சி நிதிக்காகவும், தீக்கதிர் நாளிதழ் வளர்ச்சி நிதிக்காகவும், பல்வேறு நிதியளிப்புக் கூட்டங்களில் அளித்த நிதிகளின் தொகுப்பு விவரம் வருமாறு:—

| | ரூ. | பை |
|---|---|---|
| சாப்டூர் | 221 | 50 |
| பழையூர் | 40 | 00 |
| அணைக்கரைப்பட்டி | 50 | 00 |
| வனனிவேலம்பட்டி | 150 | 00 |
| தே. கல்லுப்பட்டி | 140 | 00 |
| குண்டத்தூர் | 20 | 00 |
| பாரப்பட்டி—சின்ன சிட்டுலொட்டி | 20 | 00 |
| வில்லூர—புளியம்பட்டி | 30 | 00 |
| பேரையூர் | 50 | 00 |
| தொட்டணம்பட்டி | 40 | 00 |
| தொட்டியபட்டி | 28 | 00 |
| பூலாங்குளம் | 55 | 50 |
| கோட்டப்பட்டி | 15 | 00 |
| உத்தப்புரம் | 51 | 00 |
| உசிலம்பட்டி மின் ஊழியர்கள் | 12 | 00 |
| கோவிலாங்குளம்—கருமாத்தூர் | 23 | 00 |
| செக்காணூரணி வயிரவன் | 10 | 00 |
| மாலைக்காக | 13 | 00 |
| ஆக மொத்தம் | 964—00 | |

மூங்கில்துறைபட்டில் தொழிலாளர் தலைவர்கள் மீது

# குண்டர்களின் வெறித் தாக்குதல்

## நெய்வேலியில் கண்டன ஆர்ப்பாட்டம்

நெய்வேலி, மார்ச். 17— கள்ளக்குறிச்சி சக்கரை ஆலைத் தொழிலாளர்களையும, தலைவர்களையும் தாக்கி படுகாயமுறச் செய்த திமுக குண்டர்களின் ஜனநாயக விரோத நடவடிக்கையை கண்டித்து நெய்வேலியில் தொழிலாளர்களின் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

கள்ளக்குறிச்சி சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் கடந்த 63 நாட்களாக போனஸ் கோரி வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர். சென்னையில் அமைச்சர்கள், தொழிற்சங்கத்தலைவர்களிடம் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருக்கும் பொழுது 9-3-73 பாக்டரி திறக்கப்படும் அனைவரும் வேலைக்குவரவேண்டும் என அறிவித்தனர். ஐந்து ஊழியர்களைததவிர வேலைக்குச் செல்லவில்லை.

### தி. மு. க. எம்.எல்.ஏ. வினர் வெறியாட்டம்

ஆத்திரமடைந்த திமுகவினர் மறுபக்கம் இரண்டு தி. மு. க. எம் எல் ஏக்கள் தலைமையில் 20க்கும் மேற்பட்டலாரிகளில் தென்-ஆற்காடு, வடஆற்காடு மாவட்டங்களில் இருந்து அடியாட்களை கொண்டு வந்து 30-க்கும் மேற்பட்ட டின் நிறைய சாராயத்தை ஊற்றி. தொழிலாளர்களின் காலனிக்குள்புகுந்து தொழிலாளர்களையும், ஊழியர்களையும் கடுமையாக தாக்கியுள்ளார்கள். பெண்களை மானபங்கபடுத்தியுள்ளனர். வீடுகளில் இருந்த பொருள்களை கொள்ளையடித்துள்ளனர். தொழிலாளர்களை விரட்டி விரட்டி அடித்துள்ளனர்.

தொழிற்சாலை பகுதிக்கு அருகாமையில் இருக்கும் கிராமத்தில் தொழிற்சங்கத் தலைவர் தோழர் ஓ. பி. கோவிந்தன், தோழர் கே திருவேங்கடம், தோழர் சவுரிமுத்து உபதலைவா (கள்ளக்குறிச்சி சர்க்கரை தொழிலாளர் சங்கம்) இம் மூவரும் ஒரு வீட்டில் தங்கியிருந்தனர். தி மு க எம் எல் ஏ தலைமையில் ரவுடிகள் கூட்டம் கிராமத்திற்குள்புகுந்து அந்த வீட்டைச் சுற்றி வளைத்தது. அந்த வீட்டில் உள்ள வயதான தாய் வீட்டின் வாசலின் முன்னுல் உட்கார்த்திருந்தார்.

இந்த ரவுடிக்கும்பல் அந்த வயதான தாயைப்பார்தது கோவிந்தன் உள்ளே இருக்கிருன்! மரியாதையாக கதவைத்திற, கதவைத்திறக்காவிட்டால மண்ணெணய் ஊற்றி வீட்டை கொளுத்துவேன் எனக்கூறியது. அந்த கும்பல் கதவை திறந்து வீட்டிற்குள் சென்று அங்கிருந்த தோழர்கள் டி. பி. கோவிந்தனையும், கே. திருவேங்கடத்தையும் தடிகள், சைக்கிள் செயின்களால் கடுமையாக கொலைவெறித்தாக்குதல் நடத்தியது. தோழர்களை குத்துயிராய் உணர்வற்ற நிலை ஏற்படும் வரை தாக்கினர்கள். பிறகு போலீஸ், தாக்குண்ட தோழர்களை கைது செய்து மருத்துவமனையில் சேர்ந்துள்ளார்கள்.

இந்த கொலைகாரததாக்குதலை கண்டித்தே நெய்வேலி சி ஐ டி யூ சங்கத்தின் சார்பாக பெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது. ஊர்வலத்தின் இறுதியில் பொதுக்கூட்டமும் நடைபெற்றது. நெய்வேலி தோழர்கள் எஸ் வீரபத்திரன (பொது செயலாளர் சி ஐ டி யூ, ரத்தின சபாபதி (விச. சங்கப்பொறுப்பாளர்) ஆர் பாலசுப்பிரமணியன் (ஊழியர் சங்கப்பொதுசெயலாளர்) கே சிவதாஸ் (செயலாளர் சி ஐ டி யூ) முதலியோர் கண்டித்து பேசினர். முதலமைச்சருக்குக் கண்டனத் தந்தியும் அனுப்பப்பட்டது.

## டி. கல்லுப்பட்டியில் மாதர்கள் ஆர்ப்பாட்டம்

கல்லுப்பட்டி, மார்ச். 16— திருமங்கலம் தாலுகா கல்லுப்பட்டியில் மார்ச 11ந் தேதி மாதர்களின் ஆர்ப்பாட்டம் நடந்தது.

விலைவாசி உயர்வு, புதிய வரிகள், மின்சார வெட்டு, தி மு க அரசின் மககள் விரோத, ஜனநாயக விரோத கொள்கைகளையும், போலீஸ் அடக்குமுறையையும் எதிர்த்தும்,

கிராமங்கள் தோறும் மண்ணெண்ணெய், சீனி மற்றும் உணவுதானியங்களை நியாயமான விலையில் கிடைக்க ஏற்பாடு செய்யவும்,

ரைஸ்மில்களில் அரவைக் கூலியைக் குறைப்பதற்கும், ஏற்பாடுகள் செய்யவும் அரசை வலியுறுத்தி இந்த மாதர்கள் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது ஆர்ப்பாட்டத்தில் 50 பெண்களுக்கு ஆதரவாக ஆண்களும் கலந்து கொண்டனர். டி. கல்லுப்பட்டி பஞ்சாயத்து யூனியன் கமிஷனரிடம் மனு கொடுக்கப்பட்டது ஊர்வலத்தின் முடிவில் தாலுகா உதவி செயலாளர் தோழர் எம். கணபதி பேசினர்.

## சி. ஐ. டி. யூ. தொழிலாளி என்ருல் சம்பளத்தைக் குறைப்பதா?

### தொழிலாளர்கள் கண்டன ஊர்வலம்

திருச்சி, மார்ச். 16— திருச்சி மாவட்டம் வையம்பாடி அருகிலுள்ள பொன்னணையார்திட்ட அதிகாரிகளின் ஆணவப்போக்கைக் கண்டித்து, அத் திட்டத்திலுள்ள தொழிலாளர்கள் மார்ச் 10ல் கண்டன ஊர்வலம் நடத்தினர்.

இத் திட்ட அதிகாரிகள் சி ஐ டி யூ வைச் சேர்ந்த தொழிலாளர்களைத் தரக்குறைவாகப்பேசியும், அடித்தும், அவர்களது சம்பளங்களைக்குறைத்தும் வருகின்றனர்.

சி. ஐ. டி. யூ சங்கத்தைச்சேர்ந்த தோழர் சுப்பிரமணியனை அதிகாரிகள் தரக்குறைவாகப் பேசியதற்கும், அடித்ததற்கும், மற்றும் சி ஐ டி யூ சங்கத்தின் உதவிச் செயலாளர் பெரியசாமிஎன்பவர் சம்பளத்தைக் குறைத்ததற்கும சண்டனம் தெரிவித்து இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடந்தது.

ஊர்வலம்செல்லும்போது நிர்வாக அதிகாரிகள், சில குண்டர்களைத் தூண்டி விட்டு ஊர்வலத்தைக்கலைக்க முற்பட்டனர். போலீஸ் தலையீட்டால் அம்முயற்சி தடுக்கப்பட்டது.

ஆனல் குண்டர்களின் சலசலப்பைக் கண்டு அஞ்சாமல் தொழிலாளர்களின்கண்டன ஊர்வலம் வெற்றிகரமாக நடந்தது.

## ஜெயங்கொண்டான் குடிநீர் திட்டம்

சென்னை. மார்ச் 16— ஜெயங்கொண்டான் பகுதியில் ஏற்பட்டுள்ள குடிநீர் பற்ருக்குறையைப் போச்குவதற்கு எற்படுத்தப் பட்டுள்ள குடிநீர் திட்டம் 1975-ம் ஆண்டுக்குள் முடிவடைந்துவிடுமென இனறு சட்டப் பேரவையில் அறிவிக்கப்பட்டது.

## அரசு கண்ணடி ஆலை தொழிலாளர் வெற்றி

சென்னை, மார்ச். 15— கிண்டி தொழிற்பேட்டையிலுள்ள அரசு கண்ணடி தொழிற்சாலை (டான்சி) தொழிலாளர்கள் நிர்வாகத்தின் சட்டவிரோத லே-ஆப்-ஐ எதிர்த்து தமிழ்நாடு சிறு தொழில் (டான்சி) தொழிலாளர் சம்மேளனம தலைமையில் சகோதர தொழிலாளர்களின் ஆதரவுடன் ஒன்றுபட்டு உறுதியாகப் போராடி வெற்றி பெற்றுள்ளாாகள்.

பிப், 22 முதல் சட்ட விரோதமாக மின்சார வெட்டினை காரணம் கூறி அரசு கண்ணடி தொழிற்சாலை (டான்சி) நிர்வாக அதிகாரிகள் 200-ச்கும் மேற்பட்ட தொழிலாளர்களை லே-ஆப் செய்து மின் சாரமே தேவையில்லாத டேபுல் புளோயிங் செக்ஷன் அளவிடும் பிரிவு, பினிஷ்ங் பிரிவு, பேக்கிங் பிரிவு ஆகிய 4 பிரிவிலும் முழு அளவில் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க வசதி இருந்தும் தொழிலாளர்களை லே-ஆப் செய்து பழிவாங்கினர்கள். மேற்படி தொழிற்சாலையில் நல்ல நிலையில் இயங்கி வந்த "பர்னஸ்" இயங்கவிடாமல் ரிப்பேர் எனறு சொல்லி உற்பத்தி பிரிவில் பணியாற்றும 100-க்கு மேற்பட்ட தொழிலாளர்களையும் லே-ஆப் செய்தார்கள்.

ஜெனரேட்டர் இருந்தும், போதுமான மின்சாரம் கோட்டா இருந்தும் தமிழக அரசு சிறு தொழில் நிறுவன (டான்சி) அதிகாரிகள் இப்படி செய்துள்ளதை பார்த்து தொழிலாளர்கள் கொதிப்படைந்தார்கள்.

### ஏ. ஐ. டி. யூ. சி. யின் அசட்டை

தொழிலாளர்களின் பிரச்சினைகளை நிர்வாக அதிகாரிகள் கவனத்திற்கு கொண்டு வந்து. பாதிககப்பட்ட தொழிலாளர்களை காப்பாற்ற (கே எம் சுந்தரம தலைமை) ஏ ஐ டி யூ சி எந்தவித நடவடிக்கையும் மேற்கொள்ளவில்லை. பாதிக்கப்பட்ட தொழிலாளர்கள் தமிழக சிறு தொழில் நிறுவன சம்மேளனம் செயலாளர் தோழர் சி பி தாமோதரனிடம எடுத்து கூறினர்.

மார்ச் 6-ல் மானேஜிங் டைரக்டரை தொழிலாளர் சம்மேளன செயலாளர் சி பி தாமோதரன், சுப்ராயன், ஆறுமுகம், ஜி கிருஷ்ணன் ஆகியவர்கள் பேட்டி கண்டு சட்ட விரோத லே-ஆப்பைவாபஸ் பெற்று முழு சம்பளத்துடன் கண்ணடி தொழிலக தொழிலாளர்களுக்கு வேலை அளிக்க கோரி மகஜர் ஒன்று மானேஜிங் டைரக்டரிடம் கொடுககப்பட்டது.

தொழிலாளர்கள் ஒன்றுபட்டு உறுதியாக போராட்டத்தை தொடர்ந்து நடத்தினர்கள். மேற்படி போராட்டத்திற்கு டான்சி பூரும் மற்றுமுள்ள தொழிலாளர்கள் பேராதரவு அளித்து வந்தார்கள். மார்ச் 9-ல் மீண்டும் மானேஜிங் டைரக்டரிடம் கண்ணடி தொழிலக தொழிலாளர்கள் லே-ஆப் விஷயமாக பேச்சுவார்த்தை நடத்தினர்கள். விரைவில் லே-ஆப் வாபஸ் பெற்று எல்லா தொழிலாளர்களுக்கும் 2 தினங்களுக்குள் வேலை கொடுப்பதாக உறுதி அளிக்கப்பட்டது.

மேற்படி பேச்சுவார்த்தைக்கு பிறகு மார்ச் 12-ல் முதல் எல்லா தொழிலாளர்களுக்கும் வேலை கிடைத்துளளது.

### திருவாரூர் மாணவர் மீது

## போலீஸ் தடியடிக்கு கண்டனம்

திருவாரூர், மார்ச். 15— தஞ்சை மாவட்டம் திருவாரூர் தெற்கு வீதியில் உள்ள வடபாதிமங்கலம் சோமசுக்தரம் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள்மீது போலீசார் நடத்திய தடியடியை இந்திய மாணவர்சங்கத்தின் மன்னை வட்டகுழு சார்பாக தலைவர் தோழர் ஆர் அண்ணுதுரை, செயலர் தோழர் வே சாரபமூர்த்தி ஒரு அறிக்கையில் கண்டனம் செய்கின்றனர்.

நியாயமான கோரிக்கைகளுக்காக போராடும் பட்டதாரி ஆசிரியர்களுக்கு ஆதரவாக மேற்கண்ட உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் தொடர் உண்ணுவிரதம் மேற்கொண்டனர். அதனை ஆதரித்து மாணவர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர். அவர்கள்மீது திருவாரூர் நகர போலீஸ் மிருகத்தனமான தடியடியை நடத்தியதோடு கைது செய்து இருக்கிறது. இந்த வெறிச் செயலை வன்மையாகக் கண்டனம் செய்கிரேம்.

மாணவர்கள் அரசு என்று பீற்றிக்கொள்ளும் தமிழக அரசு அண்ணமலையில உதயகுமாரையும், பாளையங்கோட்டையில் லூர்துநாதனையும் பலிகொண்டதோடு அல்லாமல் திருச்சி கிளைவ் ஹாஸ்டல் மாணவர்கள் மீது நீசத்தனமான தாக்குதலையும் நடத்தியதோடு தற்போது தங்களது நியமான கோரிக்கைகளுக்காகவும், தங்கள் உரிமைகளுக்காகவும், போராடிய பாலிடெக்னிக் பி. பார்மஸி மாணவர்களை கைதுசெய்து சிறையில் தள்ளியுள்ளது. அத்தோடு மட்டுமல்லாது திருவாரூர் உயர்நிலைப் பள்ளி மாணவர்களையும் சித்திரவதைப்படுத்தி சிறையில் தள்ளியிருக்கிறது.

கைது செய்யப்பட்ட மாணவர்களை உடனே விடுதலை செய்வதுடன் ஆசிரியர்களின் கோரிக்கைகளை ஏற்கும்படி வலியுறுத்துகின்றனர் தம் அறிக்கையில்.

### நூல் கட்டுப்பாடு

## ஜவுளி கமிசனர் அறிவிப்பு

பம்பாய், மார்ச். 16— நூல் விற்பனையைப்பற்றி இந்திய ஜவுளி கமிசனர் புதிய உத்திரவொன்றைப் பிறப்பித்துள்ளார்.

இப்புதிய உத்தரவின்படி இனி நூல் உற்பத்தியாளர்கள் தாங்கள் உற்பத்தி செய்த நூலை ஜவுளி கமிசனர் நியமித்த நபர்களுக்குத் தான் விற்பனை செய்ய வேண்டும். அவர்கள் இஷ்டம்போல் யாருக்குவேணடுமானுலும் விற்பனை செய்யக கூடாது.

மேலும் இப்புதிய உத்தரவின்படி நூல உற்பத்தி செய்யும் நூலில் 60 சதமானத்தை சிட்டை நூலாகவும் 30 சதமானததை கோன் நூலாகவும் கட்டுகளாகவும் கட்டவேண்டும்.

ஜவுளி கமிசனர் தனது அறிவிப்பில் நூல் விலையை மில் வாயிலேயே நிர்ணயம் செய்யவேண்டுமென்றும், அதற்கானவிதி முறைகளையும் குறிப்பிட்டுள்ளார்.

நூல் உற்பத்தியாளர்கள் நூல் கட்டுகளின்மீதே நூல் விலையையும், அது எத்தனும் நம்பர் நூல் என்பதையும் தெளிவாக குறிப்பிட்டிருக்க வேண்டும்.

பனியன் நூல் உற்பத்தியைப் பொறுததமட்டில் ஒவ்வொரு மாதமும் எவ்வளவு நூல்களை கட்டுகளாகக் கட்டி விற்பனைக்கு அனுப்ப வேண்டும் என்பது பற்றி ஒவ்வொரு மாதமும் ஜவுளி கமிஷனர் தனியாக உத்தரவுகள் பிறப்பிப்பார் என்று இந்திய ஜவுளி கமிசனர் பமபாயில்வெளியிட்ட ஒரு செய்திக் குறிப்பில் அறிவித்துள்ளார்.

### பட்டதாரி ஆசிரியர்களுக்கு ஆதரவாக

## மாணவிகள் ஊர்வலம்

கம்பம், மார்ச் 16— கமபம் நகரில் ஆங்கூர் ராவுத்தர் பெண்கள் உயர் நிலைப்பள்ளியைச் சேர்ந்த ஏராளமான மாணவிகள் பட்டதாரி ஆசிரியர்களுக்கு ஆதரவு தெரிவித்து ஆர்ப்பாட்ட ஊர்வலம்நடத்தினர்.

கைது செய்யபபட்ட பட்டதாரி ஆசிரியர்களை விடுதலை செய், "ஆசிரியர்களின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்று" ஏமாற்ருதே — ஏமாற்ருதே ஆசிரியர்களை ஏமாற்ருதே, "ஆசிரியர்களை விடுதலை செய்யும் வரை போராடுவோம், ஆசிரியர்களின் கோரிக்கைகள் நிறைவேறும் வரை போராடுவோம்" என்பன போன்ற கோஷங்களை விண்ணதிர முழக்கமிட்டுச்சென்றனர்.

மாதர்குல எழுச்சியைக் காண தெருக்களில் மக்கள் பெருமளவில் கூடியிருந்தனர்.

# மின் வெட்டும் முதலாளிகளின் சதிகளும்

## கே. ரமணி—பி. எஸ். சின்னத்துரை கூட்டறிக்கை

கோவை, மார்ச். 17— இந்திய கொழிற்சங்க மைய (சி. ஐ. டி. யூ) தமிழ்நாடு கமிட்டித தலைவர் தோழர் கே. ரமணியும் ஐக்கிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் (கோவை) தலைவர் திரு. பி. எஸ். சின்னத்துரை அவர்களும் கூட்டாக பத்திரிகை நிருபர்களுக்கு விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

தமிழகத்தில் முன் எப்போதும் இருந்திராத அளவுக்கு மின்வெட்டு அமுலாக்கப்பட்டு தொழிலாளர்களை கடுமையாக பாதித்திருக்கிறது.

பயங்கரமான விலைவாசி உயர்வு. குறைவான ஊதியங்கள் ஆகியவற்ருல் ஏற்சனவே கடுமையாக தாக்கப்பட்டுள்ள உழைக்கும் மக்கள், அக்டோபர் முதலே அமுலுக்கு வந்து விட்ட மின்வெட்டால மேற்கொண்டு ஏற்படக்கூடிய ஊதியக் குறைவை எக்காரணத்தாலும் தாங்க முடியாதவர்களாக உள்ளனர் இம்மாத சம்பளத் தேதியான 7—10 தேதிகளில் ஊதியம் எதுவும் கையில்கிடைக்காததுமட்டுமல்ல, தொழிலாளர்களுக்கு கூட்டுறவு பண்டகசாலைகளில் வழக்கமாகக் கொடுத்துவந்த கடன்களைக் கூட பல ஆலைகளில் நிறுத்திவிட்டனர்.

### நிவாரணம் வழங்குக

இதனுல்தொழிலாளர்கள் மத்தியில் பெருத்த பீதி ஏற்பட்டுள்ளதோடு மின்வெட்டு வரப்போகும் பல மாதங்களுக்கு நீடிக்கப் போகிறது என்பதால் சொல்லொணுக் கவலையும், துயரமும் ஏற்பட்டுள்ளன. பாதிக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு நிவாரணம் கிடைக்கச் செய்தாலன்றி, அதுவும் காலதாமதமின்றி உடனடியாகக் கிடைக்கச் செய்தாலன்றி தொழிலாளர் வாழ்வு எல்லா வகையிலும் சீர்குலைந்து போகும் என்பதில் சந்தேகமில்லை இப்பொழுது ஆலை நிர்வாகிகள் லே-ஆப்க்கு பாதி கூலி தருகின்றனர். மறுபாதியை ஆலைநிர்வாகிகள், மத்திய—மாநில அரசுகள் ஏற்று உடனடிநிவாரணம் அளிக்க வேண்டும் எனத் தொழிலாளர்கள் ஒரே குரலில் கூறுகின்றனர்.

### செயலில் காட்டுவார்களா?

தொழிலாளர்களின் இந்த ஏகோபித்த கோரிக்கையின் நியாயத்தையும், வலிமையையும் மத்திய—மாநில அரசுகள் அவசரத்தன்மையோடு உணர்ந்து செயல் பட்டால் தான்நிலைமையைசாமளிக்க முடியும். இது குறித்து முழு கூலி அளிக்கும் விஷயம பரிசீலனைசெயயப்படுவதாக மத்திய தொழிலாளர் அமைச்சர் டில்லி மக்கள் சபையிலும், மாநில முதலமைச்சர்கள் சட்டசபையிலும் கூறியுள்ளதாக செய்திகள் வந்துள்ளன, வெறும் பேச்சோடு நிற்காமல் செயலில் அவர்கள் உடனே இறங்க வேண்டுமென்பதே நமது வேண்டுகோள்.

இந்நிலையில்சிலதொழிற் சங்கத்தலைவர்கள் பிராவிடண்ட் பண்ட் நிதி, தொழிலாளர் இன்ஸ்யூரன்ஸ் பிடித்தங்களை கைவிடுவதன்மூலம் நிவாரணம் அளிக்கலாம் எனவும், பிராவிடண்ட் பண்ட் நிதியிலிருந்து கடனுக்கு வகை செய்யலாம் எனவும் கூறி அறிக்கைகள் விட்டிருப்பது வியப்பும், வேதனையும் கொள்ளத்தக்கதாக இருக்கிறது. தொழிலாளர்கள் இப்படிப்பட்ட கடன்களை வாங்கி சமாளிக்கும் நிலையல்ல இன்று ஏற்பட்டுள்ளது.

யதார்த்தநிலைமைகளை சரியான முறையில் உணர்ந்து கொள்ளாமல் சொல்லப்படும் இந்த ஆலோசனைகள் தொழிலாளர்களை உடனடியாகவும், நிரந்தரமாகவும் பாதிப்பதாகும். தொழிலாளர்களைப் பாதுகாக்க உடனடித் தேவையானது முழு ஊதியம் கிடைக்க வேண்டுமென்பதாகும். அவர்கள் கடன் வாங்கி திருப்பிக் கட்டுவதென்பது சாத்தியமற்றது எனவே அப்படிப்பட்ட யோசனைகளை கைவிட்டு முழு நிவாரணம் என்ற தொழிலாளர் கோரிக்கையை வலியுறுத்த முன்வருமாறு சகோதரத் தொழிலாளர்களையும், தொழிற்சங்கங்களையும் நாங்கள் வேண்டிக் கேட்டுக் கொள்வதோடு கடன்கேட்பது போன்ற மேற்கூறிய அபத்தமான ஆலோசனைகளை தொழிலாளர்கள் ஏறுக்கொள்ளக் கூடாது நிராகரிக்கவேண்டுமென்றும், முழு நிவாரணம் பெற ஒன்றுபட்டு போராட முன்வரும்படியும் கோருகிரேம்.

### காலம் தாழ்த்த வேண்டாம்

மின்சார வெட்டு பாதிப்பால் ஏற்பட்டுள்ள நிலைமையின் அவசரத் தன்மையை தமிழக அரசு காலத்தோடு உணர்ந்து செயல்படத் தவறக்கூடாது என எடுத்துக்காட்டவும் விரும்புகிரேம்.

பாதிப்பைத் தாங்க முடியாத தொழிலாளர்களின் கிளர்ச்சியும், போராட்டங்களும் வெடிப்பதற்கு முன்பே நிவாரண நடவடிக்கைகளை முடிவு செய்ய அரசு முத்தரப்புமாநாட்டை கூட்டியோ அல்லது மாற்று நடவடிக்கையை தாமதமின்றி உடனே எடுக்க வேண்டுமெனக் கோருகிரேம்.

## அடக்குமுறையை நிறுத்துக கதவடைப்பை நீக்குக

# முதல்வருக்கு தந்திகள்

காவேரிநகர், மார்ச் 17— கள்ளக்குறிச்சி அருகில் உள்ள மூங்கில் துறைப்பட்டு தொழிலாளர்களை பழிவாங்கும் போக்கில் கதவடைப்பை நீககம் செய்ய திமுக அரசு மறுத்து வருகின்ற அக்கிரமத்தை எதிர்த்து வீரமாகவும்; உறுதியாகவும் போராடும் தொழிலாளர்கள் மீது ரௌடிகளும், போலீஸ் குண்டர்களும் தாக்குதல் தொடுத்திருப்பதை கண்டித்து — திருச்சி ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர்களின் மத்திய சங்கமும், காவேரி மில் தொழிலாளர் சங்கமும், கே ஆர் எஸ் நாடா பேக்டரி தொழிலாளர்களும், சபரிமில் தொழிலாளர்களும், மணப்பாறை தொழிலாளர்களும் மாநில முதலமைச்சருக்கு தந்திகள் அனுப்பியுள்ளார்கள்.

### கம்பம் வட்டாரத்தில் விவசாயத் தொழிலாளரின்

## பெரியமரக்கால் இயக்கம் வெற்றி

கம்பம், மார்ச் 17— விவசாயத் தொழிலாளர் சங்கம் தொடங்கியுள்ள, கூலியை பெரிய மரக்காலில் வாங்குவதற்கான இயக்கம் க. புதுப்பட்டியில் வெற்றிகரமாக நடைபெறுகிறது. சின்னமரக்காலான கூலி மரக்காலை வாபஸ் பெறச் செய்து பெரிய மரக்காலில் அறுவடைக் கூலிக்காக நெல்லை அளந்து வாங்குவதோடு, கூலி உயர்வும் பெறுகின்ருர்கள்.

திரு கே. ரெங்கசாமி கவுண்டரின் 6 குழி நஞ்சை நிலத்தில் அறுவடை செய்த போது தாலுகா விவசாயத் தொழிலாளர் சங்கத்தலைவர் தோழர் எம். வீரபத்திரனும், தாலுகா குழ உறுப்பினர் தோழர் எஸ் பி. முனியாண்டியும் நிலச் சொந்தக்காரருடன் பேச்சுவார்த்தை நடத்தியதோடு தொழிலாளிகளும் கோரிக்கையை வற்புறுத்தி நின்றதைத் தொடர்ந்து வெற்றியடைந்தனர்.

3படிக்கு குறைவாக பிடிக்கும சின்ன மரக்காலில் முதலில் தொடங்கியவர்கள், சின்ன மரக்காலை எறிந்து விட்டு, 4படி கொள்ளும் பெரிய மரக்காலை எடுத்து மறுபடியும் அளந்தார்கள. இதன் மூலம் தொழிலாளர்களுக்கு தலா 1 படிசகுமேல் கூலி உயர்வு கிடைததது.

திரு. ரெங்கசாமிகவுண்டரின் நிலம் கரையடி நிலமாகும்.

இதைத் தொடர்ந்து அறுவடை செய்த பல மிராசுதார்களிடமும் செங்கொடிகளுடன் தோழர்கள் எஸ் பி முனியாண்டி, முருகேசன், தாயமுத்து ஆகியோர் சென்று நிலத்தின் தூரத்துக்கும், விளைச்சலின் தரத்துக்கும் தகுந்தாற் போல் கூலி உயர்வு, பெரிய மரக்காலில் அளவும்கேட்டனர். விவசாயத் தொழிலாளர்களும் உறுதியாகக் குரலெழுப்பியதைத் தொடர்ந்து வெற்றி பெற்றனர்.

ப க. பெருமாள்கவுடரின் 2 குழி நிலத்தில் கூலியும, இதர சலுகைகளும்சேர்த்து 42 பெரிய மரக்கால் நெல்லும் ப க சு சின்னத்தம்பியின் 1½ குழி நிலத்தில் 30 பெரியமரக்கால்நெல்லும் பெற்றனர். இதுபோலவே மற்றும பலரிடமும பெரிய மரக்காலில் உயர்ந்த கூலி பெற்ருர்கள்.

குத்தகைதாரர்களிடமும் இதுபோலவே பெரிய மரக்காலில் கூலி நெல் வாங்கப்பட்டது. குத்தகையும் அதிகமாகக் கொடுக்கிரேம். நீங்கள் கூலி உயர்வும் பெற்றுவிட்டால் நாங்கள் எங்கே போவது என்று கலங்கிய குத்தகைதாரர்களிடம் சட்டப்படிகுத்தகை கொடுங்கள் போதும்! மிராசுதார்கள் ஆட்சேபித்தால் நாங்கள் உங்களுக்கு உதவியாக, விவசாயிகள் சங்கம் வரும் என்று தோழர்கள் கூறினர்கள்.

### அத்தக் கூலியாட்களுக்கு கூலி உயர்வு

புஞ்சைசத் தோட்டங்களிலும், இதர இடங்களிலும் வேலை செய்யும விவசாயத் தொழிலாள பெண் மணிகளுககு இதுவரை அத்தக் கூலியாக ரூபாய் 1—50 கொடுத்து வந்தார்கள. க. புதுப்பட்டி விவசாயத் தொழிலாளர் சங்கம ஐம்பது பைசா கூலி உயர்வு கொடுக்க வேண்டும் என்று வேண்டுகோள் விட்டது. இதைத் தொடர்ந்து அத்தக் கூலியாடகள் தினசரி கூலி ரூ. 2 வேண்டும என்று கோரிப் பெற்றுவருகிருர்கள்.

### கூடலூரில் வெற்றி

கூடலூரில் தற்போது தான் விவசாயத் தொழிலாளர் இயக்கம தொடங்கியுள்ளது. விவசாயத் தொழிலாளர் சங்கக்கிளையும் அண்மையில்தான் அமைக்கபபட்டது தோழர்மூக்கன் அதன் செயலாளராக பணியாற்றுகிருர்.

தாலுகா விவசாயத் தொழிலாளர்சங்கத் தலைவர் தோழர் ஈ. வீரபத்திரன் தா. வி. தொ. ச. செயலாளர் தோழர் வி. எஸ். பாலகிருஷ்ணன், தா. விவசாயிகள் சங்க செயலாளர் தோழர் வி. சொக்கலிங்கம் ஆகியோர் உள்ளூர்தோழர்களையும் இணைத்துக் கொண்டு களம் களமாக சென்றுவருகிருர்கள்.

அறுவடை செய்த ஆட்களே களத்தில்கதிரடிதது்க் கொடுகக மாட்டோம்என்றும், பெரிய மரக்காலில் கூலி அளக்க வேண்டும் என்றும், கூலி உயர்வு வேண்டும் என்று தொழிலாளர்கள் உறுதியாக இருக்கிருர்கள்.

இதுவரை கே பி கோபால் எம் எல் ஏ குடும்ப வயலிலும், என் எஸ் கே கண்ணப்ப கவுடர் (மகாராஜா) மொட்டையர்மாள், எஸ் ஆர் ராமதாஸ், எஸ் ஆர் எஸ் மோகன் மற்றும் பலருடைய வயல்களிலும் அறுவடை நடைபெற்ற போது தொழிலாளிகள் தங்களது கோரிக்கைகளில் வெற்றி பெற்றனர்.

பெரிய மரக்கால் அளவு கூலி உயர்வு, களததில் நெல் அடிததுக் கொடுப்பதை நிறுத்தல் ஆகியவை ஏற்கப்பட்டன. விவசாயத் தொழிலாளர் சங்கத்தலைவர்கள் இதற்கு உறுதுணையாக நின்றனர்.

## கள்ளக்குறிச்சி அடக்குமுறைக்கு கண்டனம்

ஸ்ரீவைகுண்டம், மார்ச். 17— கள்ளக்குறிச்சி சர்க்கரை ஆலைத தொழிலாளர் மீது தி மு க குண்டர்கள் போலீஸ் உதவியுடன் நடத்திய தாக்குதலை கண்டித்து உடனடியாக தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தை சுமுகமான முறையில் முடிக்க வேண்டும என்று முதல் அமைச்சருக்கு மாவட்ட விவசாயிகள் சங்கத்திலிருந்தும், மின்சார தொழிலாளர் சங்க கிளை (ஸ்ரீ வை) யிலிருந்தும் தந்திகள கொடுக்கப்பட்டிருக்கின்றன.

### கம்பம் பகுதியில்

# விவசாயத் தொழிலாளர் சங்க அமைப்பு வேலைகள் தீவிரம்

கம்பம், மார்ச். 17—

உத்தமபாளையம் தாலுகா கம்பம் பள்ளத்தாக்குப்பகுதியில் விவசாயத் தொழிலாளர் சங்க அமைப்பு வேலைகள் தீவிரமாக நடைபெற்று வருகின்றன.

கம்பத்திலிருந்து தெற்கே 2 மைல் தொலைவிலுள்ள சாமாண்டிபுரத்தில் விவசாயத்தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது இதற்கான விவசாயத் தொழிலாளர் பேரவை கூட்டம் மார்ச் 5-ல் நடைபெற்றது தோழர் பொன்னுசாமி தலைமைவகித்தார். பெண்கள் உள்பட 55 பேர் கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

தாலுகா விவசாயத் தொழிலாளர் சங்கத்தலைவர் தோழர் ம் வீரபத்திரன், செயலாளர் தோழர் வி. எஸ் பாலகிருஷ்ணன் மற்றும் தோழர்கள் வீரணன் பேபரன் ஆகியோர் இப்பகுதியில் நடைபெறும் இயக்கம் குறித்து விரிவாகப் பேசினர்.

இறுதியாக மாவட்ட விவசாயிகள் சங்கச்செயலாளர் தோழர் வி ஏ. கருப்புசாமி பேசினர், நாளுக்கு நாள் விஷம் போல் உயர்ந்து வரும் விலைவாசி உயர்வுக்கு ஏற்ப அதிகக்கூலி பெறவும், உழுபவனுக்கே நிலம் கிடைக்கவும் விவசாயத்தொழிலாளர் சங்கத்தை வலுப்படுத்த வேண்டி அவசியத்தையும் வலியுறுத்தினர்.

பின்பு சங்கத்திற்கு நிர்வாகிகள் தேர்வு நடைபெற்றது. தலைவராக வெ மொக்கையாத்தேவர், உதவித் தலைவராக ரா வேலுச்சாமி, செயலாளராக ப தங்கராஜ், உதவிச் செயலராக க பால்ச்சாமி, பொருளாளராக பே பரமன் ஆகியோரும் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக வெ மாரிமுத்து, வெ சின்னன், ப பகவதிமுத்து, ரா மொக்கைராசு, சுருளிவாடன், பெ பழனியாண்டி, க அய்சு ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ராமராஜ் ஆகியோரும் மற்றும் மூக்கப்பன், கருப்பையா, முருகேசன், சிராமர், ராசுத்தேவர், ராமகிருஷ்ணன், எஸ் கோபால் ஜே ஜக்கையா கவுடர், கிருஷ்ணமூர்த்தி ராஜையன், வி சொண்டையபொம்மு, எஸ் அய்யார், எஸ் பெருமாளப்பன் ஆகியோர் நிர்வாகக்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

#### கம்பம் நகரில்

கம்பம் நகரில் 5,13 வார்டுகளுக்கான விவசாயத் தொழிலாளர் சங்க அமைப்புக்கூட்டம் மார்ச் 13ல் நடந்தது, தோழர் லெட்சுமணன் தலைமைவகித்தார். சுமார் 30 பேர் கலந்து கொண்டனர்.

தோழர்கள் எம் வீரபத்திரன், வி. எஸ். பாலகிருஷ்ணன். ஏ. கண்ணப்பன், பி கருப்பசாமி ஆகியோர் இயக்க நடவடிக்கைகள் குறித்து பேசியபின், இறுதியாக மதுரை மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயற்குழு உறுப்பினர் தோழர் ஏ. ஏ. வஹாப் பேசினர். சங்கத்தை பலப்படுத்தவேண்டியதின் அவசியம் குறித்து விளக்கினர்.

இறுதியாக நிர்வாகிகள் தேர்வு நடைபெற்றது. தோழர் அ. கருப்பையா தலைவராகவும். உதவித் தலைவராக க. சின்னவீரனும் செயலாளராக மு. பெரியசுருளியும, உதவிச்செயலாளராக அ சுருளியும், பொருளாளராக செ. நாராயணனும் மற்றும் மு. மாரியப்பன், அ. பொன்னையா, பெ கோபால வி. ஒண்டி, ஆ. சின்னச்சாமி பெ. சாமாண்டி, செல்லையா த. த பிச்சாமி, கார்மேகம் ஆகியோர் நிர்வாகக்குழு உறுப்பினர்களாகவும ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

#### சுருளிப்பட்டியில்

கம்பத்திலிருந்து கிழக்கே 2 மைல் தொலைவிலுள்ள சுருளிப்பட்டி கிராமத்தில் விவசாயத் தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது. இதற்கான அமைப்புக் கூட்டம் மார்ச் 6-ந் தேதி நடந்தது. தோழர் கே கிருஷ்ணமூர்த்தி தலைமைவகித்தார். பெண்கள் உள்பட நூறு பேர் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் வி ஏ கருப்புசாமி மற்றும் தோழர்கள் வி எஸ் பாலகிருஷ்ணன், ஏ கண்ணப்பன் பி கருப்புசாமி, ராமசாமி, முருகேசன் ஆகியோர் சங்க முக்கியத்துவத்தை விளக்கிப் பேசினர்.

இறுதியில் சங்கத்திற்கு நிர்வாகிகள் தேர்வு நடந்தது தலைவராக கே கிருஷ்ணமூர்த்தியும், உதவி தலைவராக தாந்தியப்ப பூசாரி, ராமபோயன் ஆகியோரும் செயலாளராக எஸ் டவுன்ராஜூம்; உதவிச் செயலாளர்களாக கிராமு,

### ஆதரவு

நெல்லிக்குப்பம்.

மார்ச், 18—

நெல்லிக்குப்பம் இ. ஐ டி. பாரி சர்க்கரை ஆலைத் தொழிலாளர் சங்கம் ஈ. ஐ. டி. பாரி சிப்பந்திகள் சங்கம் இவைகளின் கூட்டு நிர்வாகக் குழுக்களின் கூட்டம் மார்ச் 15ந் தேதி மாலை 6 மணிக்கு நடந்தது.

இந்தமூன்றுசங்கங்களின் தலைவர் தோழர் சி, கோவிந்தராஜன் தலைமை வகித்தார்.

அவ்வமயம் பட்டதாரி ஆசிரியர்களுக்கு ஆதரவு தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### விஷவித்துக்களை

## முழுமையாக நிராகரிக்கவில்லை

புதுடில்லி, மார்ச் 16—

அமெரிக்காவிலிருது இறக்குமதி செய்யப்பட்ட மக்காச் சோளத்தில் ஊமத்தை கலந்திருந்ததை யொட்டி, புதிதாக மக்காச் சோளம் வாங்குவதை இந்தியா அரசு நிறுத்தியுள்ளது

ஒவ்வொரு கப்பலையும் சோதனையிட்டு அனுப்பும் படி வாஷிங்டனிலுள்ள இந்தியா சப்ளை அலுவலகத்தை, இந்திய அரசு கோரியுள்ளது. மக்காச்சோளத்தில் விஷவித்துக்கள் கலந்திருந்ததால் தான் அங்கு இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது. கடந்த காலத்திலும் சில சமயங்களில் இம்மாதிரி நிகழ்ச்சி நடந்துள்ளது, ஆனல் தற்பொழுது நிகழ்ந்ததைப் போன்று நடக்க வில்லை.

இந்தியாவுக்குத் தேவையான 6½ லட்சம் டன் மக்காச்சோளத்தில் 1லட்சத்து 72 ஆயிரம் டன்னை அர்ஜெண்டைனவிடமிருந்து பெறுகிறது. மீதமுள்ளவற்றை அமெரிக்காவிடமிருந்து பெற்றுவருகிறது என அமைச்சர் ஏ பி ஷிண்டே செய்தியாளர்களிடையே அறிவித்தார்.

# பஞ்சாப் போராட்டம் தொடர்கிறது

## பல இடங்களில் தடியடி

(நமது டெல்லி நிருபர்)

புதுடெல்லி, மார்ச் 18—

பஞ்சாப் மாநிலத்தில் விலைவாசிக் குறிப்பு உள்பட பல கோரிக்கைகளுக்காகவும் பிப்ரவரி 28ந் தேதியிலிருந்து மறியல் போராட்டம் தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. இதுவரை 2000க்கும் மேற்பட்டோர் கைதாகியுள்ளனர்.

ஜலந்தர், முக்க்ஸார் போன்ற இடங்களில் அமைதியாக மறியல் செய்த தொண்டர்கள் மீது கண்மூடித்தனமான தடியடிப் பிரயோகம் செய்யப்பட்டது.

பல இடங்களில் கைதான தொண்டர்கள் நள்ளிரவில் 40, 50 மைல்கள் தொலைவிற்கு கொண்டு செல்லப்பட்டு விடுவிக்கப்படுகின்றனர். நூற்றுக்கணக்கான பெண் தொண்டர்களும் மறியலில் பங்கு கொண்டு சிறை சென்றிருக்கின்றனர்.

மார்ச் 12-ந் தேதி அன்று சண்டிகர் நகரில் பஞ்சாப் சட்டமன்றத்தின் முன் மறியல் செய்த 40 பெண் தொண்டர்கள் தாக்குதலுக்கு உள்ளாகி கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

#### சட்டசபையில் வெளிநடப்பு

இந்தத் தொண்டர்கள் தாக்கப்பட்டதைக் கண்டித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சட்டமன்ற உறுப்பினர் தோழர் சாங்க்சிங்கும், அகாலிதளத்தைச்சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர்களும், சட்டமன்றத்திலிருந்து வெளிநடப்புச் செய்தனர். வலது கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் வெளிநடப்புச் செய்யவில்லை. சங்ரூரில் 40 பெண்தொண்டர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

#### ஜலந்தரில் தடியடி

மார்ச் 5-ந் தேதி ஜலந்தர் மாவட்ட விவசாய சங்கச் செயலாளர் தோழர் ஹர்பான்ஸ் சிங் தலைமையில் 170 தொண்டர்கள் ஜலந்தர் உதவி கமிஷனர் அலுவலகம் முன் மறியல் செய்தனர் அங்கிருந்த டூட்டி மாஜிஸ்ட்ரேட், தடியடிப்பிரயோகத்திற்கு உத்தரவிட்டதோடு தானே தடியெடுத்து, மறியல் தொண்டர்களைத் தாக்கியுள்ளதாகத் தெரிகிறது.

போராட்டம் தொடர்ந்து நடைபெறுகிறது.

## இந்திராபாணி அடக்குமுறை



மார்ச் 5-ந் தேதி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஜலந்தர் நகரில் நடந்த மறியல எக்ஸ்' குறியிட்டப்பட்டிருப்பது தோழர் ஹர்பான்ஸ்சிங். தடியடிக்குப்பின் இழுத்துச் செல்லப்படுகிறர், கருப்புக்கோட்டு அணிந்திருப்பது உதவி கமிஷனர்.

## சைக்கிள் வரி ரத்து

சென்னை, மார்ச் 13—

சில ஸ்தலஸ்தாபனங்கள் சைக்கிள் மீது வரி விதிக்கின்றன. இனி எந்த ஸ்தலஸ்தாபனமும் சைக்கிள் வரி விதிக்கக்கூடாதென அரசு உத்திரவிட்டிருப்பதாக அமைச்சர் நெடுஞ்செழியன் அறிவித்துள்ளார்,

### மார்ச் 25-ம் நாள்

# காண்ட்ராக்ட் முறை

## எதிர்ப்புக் கிளர்ச்சி நாள்

## சி. ஐ. டி. யூ. அறைகூவல்

சென்ற மாதம் தூத்துக்குடியில் நடந்த சி. ஐ. டி. யூ. வின் தமிழ் மாநிலக் குழு கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவின்படி,

— காண்ட்ராக்ட் முறைமுழுவதையும் ரத்துச் செய்யக்கூடிய சட்டம் வேண்டுமென்று கோரவும்,

— தற்போதுள்ளசட்டத்துக்கு விதிகளை உருவாக்கும்படி வற்புறுத்தவும்

— மாநில வாரியம் அமைக்கப்பட வேண்டுமென்று கோரவும்.

மார்ச் 25-ம் நாளில் ஊர்வல ஆர்ப்பாட்டங்களும், பொதுக் கூட்டங்களும் நடத்தும்படி கேட்டுக் கொள்கிறேன்.

மதுரை
19—3—73

தோழமையுள்ள
ஏ. நல்லசிவன்
உதவிச் செயலாளர்
சி. ஐ டி யூ தமிழ்நாடு மாநில குழு

### அரியானு ஆசிரியர்கள் போராட்டம்

## டெல்லி சர்வகலாசாலை ஆசிரியர்

# ஆதரவு மறியல்

(நமது டெல்லி நிருபர்)

புதுடெல்லி

மார்ச். 17—

கடந்த 29 நாட்களாகப் போராடி வரும் ஆயிரக்கணக்கான அரியானு ஆசிரியர்களுக்கு ஆதரவாக டெல்லி சர்வகலாசாலையை சேர்ந்த ஆசிரியர்கள் மறிமல் போராட்டத்தில் ஈடுபட்டு கைதாகியுள்ளனர்.

டெல்லி சர்வகலாசாலை ஆசிரியர்கள் சங்கத்தலைவர் குமரேஷ் சக்கரவர்த்தியும், மூன்று நிர்வாகக் குழு உறுப்பினர்களும் ஆக 20 ஆசிரியர்கள் நேற்று, பார்லிமெண்ட் தெருவில் தடையுத்தரவை மீறிக் கைதாகியுள்ளனர். இவர்களுக்கு 10 நாட்கள் சிறைத் தண்டனை கொடுக்கப்பட்டுள்ளது.

இதைத் தொடர்ந்து இன்று காலை நடைபெற்ற மறியலில் கலந்துகொண்ட டெல்லி சர்வகலாசாலையின் மற்றொரு ஆசிரியர் குழு கைது செய்யப்பட்டுள்ளது 14-ந்தேதியிலிருந்துவட இந்தியாவிலுள்ள பல்வேறு சர்வகலாசாலைகளைச் சேர்ந்த ஆசிரியர் குழுக்கள் ஹரியானு ஆசிரியர்களுக்காதரவாக டெல்லியில் மறியல் செய்தார்கள்.

### தமிழகமெங்கும்...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

37பேரும், பரவாக்கோட்டை அஞ்சல் நிலயம் முன் என். கோவிந்தராசு தலைமையில் 46 பேரும். நீடாமங்கலம் துணை தாசில்தார் அலுவலகம் முன் ம. கோதண்டம் தலைமையில் 47 பேரும் மறியல் செய்கிறார்கள்.

#### குளத்தூரில்

மறியல் போராட்டத்துக்கு குளத்தூர் தாலுகா தயாராகி விட்டது.

இத்தாலுகாவில இன்று காலையில் காவேரிநகர், அன்னவாசல், குடுமியான் மலை பிரதாம்பூர், கீரனூர், முதலிய 5 இடங்களில் மறியல் நடக்கிறது.

#### விவரம்

தோழர்கள் சி. கே. ரெங்கசாமி, பிளமின்தாஸ் தலைமையில் காவேரி நகர் அஞ்சல் நிலயம் முன்பும், எம மாரியப்பன் தலைமையில் அன்னவாசல் அஞ்சல் நிலயம் முன்பும், எம். அடைக்கலம் தலைமையில் குடுமியான்மலை அஞ்சல் நிலயம் முன்பும், வீராச்சாமி தலைமையில் புத்தாம்பூர் அஞ்சல் நிலயம் முன்பும், ஆரோக்கியசாமி ஏ கிருஷ்ணன் தலைமையில் கீரனூர் தாலுகா அலுவலகம் முன்பும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி ஐ டி யூ விவசாய சங்கத் தோழர்கள் மறியல் செய்வர்.

மறியல் போராட்டத்துக்கான தயாரிப்பு வேலைகளில் தோழர்கள் தீவிரமாக இறங்கியுள்ளனர்.

#### ஈரோட்டில் 50 பேர்

ஈரோட்டில் இன்று காலையில் தாலுகா அலுவலகம் முன் மறியல் நடைபெறுகிறது.

இந்த மறியலில் ஈரோடு, சென்னிமலை, பெருந்துறை, விஜயமங்கலம், கவுந்தம்பாடி, பவானி ஆகிய ஊர்களைச் சார்ந்த 50க்கு மேற்பட்ட தோழர்கள் கலந்து கொள்கிறார்கள்.

### சேலம் முனிசிபல் தொழிலாளர்களின்

# ஆர்ப்பாட்டம் - உண்ணுவிரம்

சேலம்,, மார்ச் 19—

ஆயிரத்துக்கு மேற்பட்ட சேலம் முனிசிபல் தொழிலாளர்கள், பட்டதாரி ஆசிரியர்களுக்கு ஆதரவு ஊர்வலம் மார்ச் 18-ந்தேதி நகரசபை முன் நடத்தினர்.

ஊர்வலத்தினர் வீட்டு வாடகை உயர்வு ரூ 8 உடனே வேண்டும் என்றும் குடி தண்ணீர் வேண்டும், பஞ்சப்படியை கையில் கொடு என்றும்கோஷமிட்டு சென்றனர்,

வழியில் பட்டதாரி ஆசிரியர்கள் உண்ணுவிரதபந்தல் அருகே நின்று அவர்கள் போராட்டத்தைஆதரித்தும் கைது செய்யப்பட்டவர்களை விடுதலை செய்யக் கோரியும் இடிமுழக்கம் செய்தனர்.

#### நகரவை அதிகாரியிடம் மகஜர்

நகரசபை கமிஷனரை சங்க பிரதிநிதிகள் ஐவர் பார்க்க அனுமதிகேட்டனர். இருவரை அனுமதிப்பதாக அதிகாரி கூறினர். இதை ஆட்சேபித்து ஊர்வலத்தில் கொண்டு வரப்பட்ட 10 காலி குடங்களை ஆபீஸ் வாசலில் போட்டு உடைத்தனர். பிறகு கமிஷனர் ஐந்து பிரதிநிதிகளை அழைத்துப் பேசினர்.

சம்பள கமிஷனர் சிபார்சு அடிப்படையில் உயர்த்தப்பட்ட வீட்டு வாடகை ரூ 8 வீதம் 30 மாதமாக கொடுபடாமல் இருக்கும் வீட்டு வாடகை உடனேகொடுக்க வேண்டும். ஐந்து லாரி குடி தண்ணீர் சப்ளை செய்து வந்தது ஒரு லாரியாக வருவதை மீண்டும் உயர்த்தி கொடுக்க வேண்டும். பிடித்த போனஸ் பண்டு கணக்கிற்கு கணக்கு கொடுக்க வேண்டும், ரோடு காங்க் தொழிலாளர்களின் பஞ்சப்படி பிடித்தத்தை திருப்பித் தரவேண்டும், செருப்பு, வேலை கருவிகள் உடைகள், தாமதமில்லாமல் வழங்க வேண்டும் போன்ற கோரிக்கைகள் அடங்கிய மகஜர் சமர்ப்பிக்கப்பட்டது.

#### உண்ணுவிரதம்

இரண்டாம்கட்டபோராட்டமாக நகரசபை முன் மார்ச் 14-ல் தோழர்கள் கே, மெப்பராயன் கே. சடையன் கே, கண்ணன், கே. ஆறுமுகம் அயல்ராமன் ஆகியோர் கோரிக்கைகளை வற்புறுத்தி மூன்றுநாள் உண்ணுவிரதப் போராட்டம் துவங்கினர்கள். பகல் 11 மணிக்கும், மாலை 5 மணிக்கும் ஆயிரம் தொழிலாளர்களும் கட்டுப்பாடாக வேலை ஸ்தலத்திலிருந்து நகரசபை முன் வந்து ஆர்ப்பாட்டம் செய்தனர்.

#### 2வது அணி உண்ணுவிரதம்

கோரிக்கைகளை அடைய மூன்றும் நாள் உண்ணுவரதம தோழர்கள் ஏ மாரிமுத்து, முருகேசன், குப்பன் செங்கோடன், ராஜூ ஆகியோர் மேற்கொண்டனர்.

தொழிலாளர்கள் 1000ம் பேர் உறுதியாக கட்டுப்பாடுடன் காலையும் மாலையும் நகரசபைமுன் ஆர்ப்பாட்டம் செய்வதுடன் அவர்கள் ரோல்கால் எடுக்கும் 22 இடங்களிலும் கோஷம் எழுப்பி நகரத்தை அதிரவைத்து வருகின்றனர்.

சேலம் வங்கி ஊழியர்கள் சுமார் 300பேர் ஊர்வலமாக வந்து முனிசிபல் தொழிலாளர் கோரிக்கையை ஆதரித்து, உண்ணுவிரதபந்தல் முன் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

தபால்-தந்தி ஊழியர்கள் சங்கபிரதிநிதிகளும், ஏ ஐ.டி. யூ. சி பீடி சங்கத்தைச் சேர்ந்த பிரதிநிதிகள் முஸ்தபா தலைமையிலும் வந்து ஆதரவு தந்து பேசினர்.

### மணிப்பூர்

## சட்ட மன்றம் கூடுகிறது

மணிப்பூர், மார்ச். 18—

இந்திய யூனியன் பிரதேசமான மணிப்பூரில் மார்ச் 22ம்தேதி சட்ட மன்றம் கூடும் என்று மணிப்பூர் சபாநாயகர் இன்று இம்பாலில் அறிவித்தார்.

அன்று சட்டமன்றத்தில் எதிர்க்கட்சிகளும், ஆளும் கட்சிகளும தங்களது பெரும்பான்மை பலத்தை பரிசோதித்துக் கொள்ளும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

# பொறுப்பாளி யார்?

புதுடில்லி, மார்ச் 15—

1972-ம் ஆண்டில் அரசுத்துறை நிறுவனங்களில் நடந்த 476 வேலை நிறுத்தங்களின் விளைவாக 24 லட்சத்து 93 ஆயிரத்து பதினெட்டு மனித நாட்கள் வீணாய்ப் போய் விட்டன என்று தொழிலாளர் நல அமைச்சர் கே. வி. ரகுநாத ரெட்டி இன்று மக்களவையில் அங்கலாய்த்தார். 1971-ல் 382 வேலை நிறுத்தங்களும், 1970-ல் 440 வேலை நிறுத்தங்களும், 1969-ல் 382 வேலை நிறுத்தங்களும் நடந்தன. இவற்றின் விளைவாக வீணாகிவிட்ட மனித நாட்கள் முறையே 20,26 307; 18,98,046; 12,83,250 என்று கணக்குத் தந்தார்.

ஆனல் இந்த விபரங்களுக்குப் பின்னல் உள்ள ஒரு உண்மையை வெளியிட மறுத்தார். பொதுத்துறை செல்வத்தை உருவாக்கி வரும் அந்த உழைப்பாளர்கள் முன்வைத்த மிக மிக நியாயமான கோரிக்கைகளை ஏற்க மறுத்ததால் தானே இந்த வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டன? அரசியல் குரோதத்தின் அடிப்படையில் தொழிலாளர்களைப் பழி வாங்கிடும் அரசின் போக்கில்தானே தொழில் தகராறுகள் பல தோன்றின?

# வீரசுதந்திரம்வேண்டி நின்ருர்.....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தெரியுமா? ஆன செலவு என்ன தெரியுமா?

அடுத்தடுத்து வந்த ஒவ்வொரு ஜனதிபதியின் காலத்திலும் — ஆன மட்டும் சண்டை போட்டுத்தான் பார்த்தார்கள். அவ்வப்போது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒவ்வொரு ஆயுதத்தையும் பயன்படுத்தித்தான் பார்த்தார்கள். அந்த நச்சு ஆயுதங்கள் ஒவ்வொன்றையும் பரிசோதித்துப் பார்க்கும் சோதனைக்களமாக வியட்னும் பூமியை ஆக்கித்தான் பார்த்தார்கள்.

#### வெறித் தாக்குதல்

வியட்னமில் யுத்தம் நடந்த காலத்திலே, உயிர் இழந்தோரும், படுகாய முற்றோரும், வீடு வாசலற்ற அனதைகளாகப் போனேரும், ஆக மொத்தம 58 லட்சம் பேர் சேதமடைந்தார்கள்.

3000 கிராமங்களேயும் குடியிருப்புகளையும் அழித்து நாசமாக்கினர்கள்.

வெளியே வராதபடி "கம்யூனிஸத்தை முடக்கி வைக்கிறோம"— என்ற தத்துவத்தைப் பேசிக்கொண்டு. அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்கள் என்ன செய்தார்கள்? வட வியட்னமில் உயிர்கள் ஏதும் இருக்கக் கூடாது என்று வெறிபிடித்து அழிவுவேலையில இறங்கினர்கள், கட்டிடங்கள எதுவும் இருக்கக்கூடாது என்று துடித்தனர். அந்த நச்சுக்கொள்கையை நடைமுறையில் நடத்தி மருத்துவ மனைகளையும் 1-ம் பக்கத்திலுள்ள படம்ஹெனய் மருத்துவமனையின் மிச்ச சொச்சம்) பள்ளிக்கூடங்களையும் குண்டுவீசித்தகர்த்தனர். பல்வேறு மதத்தினரும் தொழுதுவரும மாதா கோவில்களையும், புத்த ஆலயங்களையும் மசூதிகளையும் தரைமட்டமாக்கினர், அன்னிய தூதுவராலயங்களையும் விட்டுவில்லை.

குண்டுவீசியது ஒரு குறிக்கோளுக்காக அல்ல. கண்ணில் பட்ட அத்தனையையும் தவிடுபொடி ஆக்கி விடவேண்டுமென்ற கண்மூடித்தனமான வெறியினல்தான்!

அணைக்கட்டுகளை அழித்தார்கள். வாய்க்கால்களையும் பாலங்களையும் இடித்தார்கள்,

இரசாயன குண்டுகளை வீசி காடுகளையும் பசும் வயல்களையும் எரித்து சாம்பலாக்கினர்கள்.

உலக வரலாற்றிலேயே இவ்வளவு மூர்க்கத்தனமாகவும், இவ்வளவு மனிதத்தன்மை அற்ற நிலையிலும் நடந்து கொண்ட ஒரு நிகழ்ச்சியை யாரும் பார்த்திருக்கவே முடியாது. நாகரீக உலகம் காறித்துப்புவதைப் பற்றி இவர்களுக்கு யாதொரு கவலையும் கிடையாது.

#### எப்படித்தான் மறக்க முடியும்?

ஜனநாயக நாடு என்று பெருமையடித்துக் கொள்ளும் ஒரு நாடானது இதற்கு முன் என்றுமே கண்டிராத, காட்டுமிராண்டித் தனமான, ஒரு நீச யுத்தத்தை அமெரிக்க வரலாற்றிலேயே இல்லாத ஒரு கொடும யுத்தத்தை 10 ஆண்டுகளுக்கு மேலாக நடத்தி வந்தது என்றல அதுவும்கூட ஒரு சின்னஞ்சிறு ஆசியா நாட்டுக்கு எதிராக, அதனுடைய தலைவிதியை அதுவே நிர்ணயித்துக்கொள்ள அனுமதிக்க மறுத்து—ஒரு பிரகடனப்படுத்தப்படாத யுத்தத்தை—குரூர யுத்தத்தை நடத்தினர்களே, அந்தக் கொடுமையை, இழிசெயலை எப்படித்தான மறக்க முடியும்!

ஆனலுங்கூட, இப்படிக் கூற்றுவனைத்த பயங்கரத்துக்கு முன்னேயும் கூட—கூற்றினுக்கு உயிர் கோடி கொடுத்தும், சுதந்திரப்பேற்றினைப் பெறுவோம என்று சங்கநாதம் செய்து உடைக்க முடியாத தேசபக்த உணர்ச்சி ஆவேசத்துடன் எழுந்து நின்று—மீண்டும் மீண்டும் போராடி— அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் நெஞ்சில் ஏறி நின்று வெற்றிச் சங்கு ஊதினர்களே, வீரகோஷமெழுப்பினர்களே உலக மக்களுக்கு ஏகாதிபத்தியத்தை எவ்வாறு விரட்ட வேண்டுமென்று போதித்துள்ளார்களே வியட்னும் மக்களுக்குத் தலைதாழ்த்துகிறோம்.

ஓ! வியட்னும் சுதந்திரப் போராட்ட வீரர்களே! உங்களுக்கு தலைதாழ்த்துகிறோம்.

#### தமிழ்நாட்டு உழைக்கும் வர்க்கமே!

இந்த வீரர்களின் விழுப்புண் ஆற்றிட சிறு காணிக்கையினை வழங்கிட உங்களது பங்கினை ஆற்றிவிட்டீர்களா?

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், (13, முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர்: ஆசிரியர் கே. முத்தையா.

# மத்திய - மாநில அரசு அலுவலகங்கள்முன் மறியலுக்கு ஆயிரம் ஆயிரமாய் அணி திரள்க